Regd. No. 2975.

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 180.

P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5 ஜீவியச் சந்தா ரூ. 100.

ஜீவியச் சந்தாதாரர்களுக்கு பத்திரிகை சாச்வதமாக அனுப்பப்பட்டு வருவது தவிர 100 ரூபா விலையுள்ள புத்தகங்கள் உடனே அனுப்பப்படும்.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீவரரங்கபெருமாளார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி*—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

சோபகிருதுஸ்ரீ மார்கழிமீ 25—12—1963.

# ஸ்ரீ ராமாநுஜன் 180.



சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 15 | 1963ஞு டிசம்பர்மீ<br>சோபகிருதுஞு மார்கழிமீ | ஸஞ்சிகை 12. |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—69.

என்றனைநீ யிங்குவைத்த தேதுக்கென* மாலும்
என்றனக்கு மென்றமர்க்கு மின்பமதா—*நன்றுகவி
பாடவெனக் கைம்மா றிலாமை பகர்மாறன்*
பாடணைவார்க் குண்டாமின் பம்.

| | | | |
|---|---|---|---|
| என்தனை நீ இங்கு வைத்தது ஏதுக்கு என | (எம்பெருமானே!) என்னை நீ இந்நிலத்தில் வைத்திருப்பது எதற்காக? என்று கேட்க, | கைம்மாறு இலாமை பகர் | இவ்வுபகாரத்திற்கு ஏற்ற பிரதியுபகாரம் தம்மிடத்தில் இல்லாமையை நிர்வேதத்துடன் அருளிச் செய்த |
| மாலும் | —எம்பெருமானும் | மாறன் பாடு | —ஆழ்வார் பக்கலிலே |
| என் தனக்கும் என் தமர்க்கும் இன்பம் அது ஆ நன்று கவி பாட என | "எனக்கும் என்னடியார்க்கும் போக்யமாக திவ்ய ப்ரபந்தமருளிச் செய்வதற்காக (வைத்திருக்கிறேன்)" என்று விடையருள, | அணைவார்க்கு | —சேருமவர்களுக்கு |
| | | இன்பம் உண்டாம். | ஆனந்தமுண்டாகும். |

*** பிரானே! எனக்கு ருசியில்லாமலிருக்க என்னை இந்த ஸம்ஸாரத்திலே நீ வைத்திருப்பது எதற்காகவென்று ஆழ்வார் கேட்க, 'உம்மைக் கொண்டு நமக்கும் நம்முடையார்க்குமனுபவிக்கலாம்படி விலக்ஷணமான திருவாய்மொழியைப் பாடுவித்துக்கொள்ளவே உம்மை இங்கு வைத்தோம்காணும்' என்று எம்பெருமானருளிச் செய்ய, வியாஸபராசராதி மஹர்ஷிகளும் முதலாழ்வார்களுமுண்டாயிருக்க, நீசனேன் நிறையொன்றுமிலேனைக் கொண்டு இக்காரியம் கொள்ளத் திருவுள்ளம் பற்றின இம்மஹோபகாரத்திற்கு உபய விபூதியிலும் கைம்மாறு ஒன்றுமில்லையே யென்று தடுமாறிப் பேசினது * என்றைக்கு மென்னை யென்கிற திருவாய்மொழி.

கீழ்த் திருவாய்மொழியாகிய * மாயாவாமனன் பதிகம் சென்றது எம்பெருமானுடைய ஒரு ஆச்சர்ய சாதுரியத்தாலேயாயிற்று. ஆழ்வார் ஒன்று கேட்க. எம்பெருமான் ஒன்றைச் சொல்லி அவர் கேட்டதை மறப்பிக்குமியல்வினனுகையாலே ஒவ்வொரு ஸமயத்திலே ஒவ்வொரு குணவிஷ்காரத்தைப் பண்ணுவதும் அதை ஆழ்வார் அனுபவிக்குமாறு செய்வதும் அத்தாலே சிறிதுபோது கழியும்படியாகச் செய்வதும் ஆக இப்படியே நடந்து வாராநின்றது. இப்படிப்பட்ட எம்பெருமானை இன்று மடி பிடித்துக் கேட்டு உத்தரம் பெற்றேயாகவேணுமென்கிற தீவிரமான ருசி ஆழ்வார்க்கு உண்டாயிற்று. அதனால் எம்

பெருமானை வலியப் பிடித்துக்கொண்டு 'பிரானே! என்னுடைய ஆற்றாமையில் குறை கண்டாயோ? உன்னுடைய சக்தியில் குறை கண்டாயோ? ஏதுக்கு இப்படி யென்னை நலியுமவற்றின் நடுவே வைத்து நலியா நின்றாய்?* பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்புமாய் நின்ற நீர்மையிலே மிக்க அருவருப்புக் கொண்ட வென்னை இக்கொடிய நிலத்திலே வைத்துக் குமைப்பது பரமகாருணிகனான உனக்குப் பொருந்துமோ? என்ன திருவுள்ளங்கொண்டு என்னை யிங்கு இட்டுவைத்திரா நின்றாய்? இது தன்னை நீ சொல்லியேயாக வேணும்' என்றாராழ்வார். அதுகேட்ட எம்பெருமான் 'ஆழ்வீர்! என் கருத்தை நீர்தாம் அறியீரோ? அறிந்துவைத்தும் அறியாதவர்போலக் கேட்கின்றீரே; நமக்கும் நம்முடையவர்க்கும் போதுபோக்குக்கு உரித்தான செவிக்கினிய செஞ்சொற்களைப் பாடித்தருகைக்காகவன்றோ நான் உம்மை இந்நிலத்திலே வைத்திருப்பது; அப்படியிருக்க ஏன் பதறுகிறீர்?' என்ன, அது கேட்ட ஆழ்வார் 'பிரானே! இதுவோ உன் கருத்து? ஸர்வேச்வரனாய் அவாப்தஸமஸ்தகாமனாயிருந்துள்ள உனக்கும் ஒரு குறையுண்டாகி அக் குறையை என்னாலே தீர்த்துக்கொள்ளப் பார்ப்பதாகிறவிது நன்றாயிருந்தது! உனக்குச் சில ப்ரபந்தங்கள் வேண்டினால் அவையியற்றுவதற்குரிய அறிவு ஆற்றல் முதலியவை நிரம்பிய வ்யாஸபராசர வால்மீகி முதலானாரைக் கொண்டும் * இன்கவிபாடும் பரமகவிகளான முதலாழ்வாரைக் கொண்டும் பாடுவித்துக்கொள்ளலாகாதா? நீசனேன் நிறையொன்றுமிலேனைக் கொண்டு பாடுவித்துக் கொள்ளத் திருவுள்ளம் கொண்டபடி என்னே! இது என்ன நீர்மை! இது என்ன வாத்ஸல்யம்! என்று பெரு நன்றி பாராட்டி, இதற்கீடாக நான் செய்வதொரு கைம்மாறு கண்டிலேனே! என்று தடுமாறுவதாய்ச் செல்லுகிறது இத் திருவாய்மொழி. (69)

——*——

## ஸம்வத்ஸரஸமாப்தி விஜ்ஞாபனம்.

நம் ஸ்ரீராமாநுஜனுடைய பதினைந்தாவது பிராயம் இன்று முடிவுபெற்றது. அடுத்த தைத்திங்களில் பதினாறாவது பிராயத்தில் அடிவைக்கும் பாக்கியம் அமைகின்றது. நம் ராமாநுஜன் தோன்றின நாள் முதல் இன்றளவாக ஸ்ரீவைஷ்ணவவுலகுக்கும் ஆஸ்திகவுலகுக்கும் செய்திருக்கும் ஸேவைக்கு அன்பர்கள் உகந்து அடிக்கடி விடுத்த நிருபங்களுக்கு நன்றி; மிக நன்றி. இனியும் இத்தகைய ஸேவை செய்யக் காத்திருக்கின்றது. அன்பர்கள் இதுகாறும் ஆதரித்து வந்ததுபோல் இனியும் ஆதரிக்க வேண்டுகின்றது.

ஸ்ரீராமாநுஜன்.

---

### — ஸ்ரீராமாநுஜன் சந்தா செலுத்தியவர்கள் —

131. ஸ்ரீமான் உ. வே. கோம்பூர் ஸ்ரீரங்கநாதய்யங்கார், ஸன்னிதியர்ச்சகர்.
132. ,, T. சாமையங்கார், Retd. Judge, Bangalore.
133. ,, S. கிருஷ்ணய்யங்கார், திருநெல்வேலி டவுன்.
134. ,, R Rajagopalan, Esqr. Alagappa College.
135. ,, A. Ramanujachari, B. A., New Delhi.
136. ,, K. Narayanasami Reddiar. மாளிகைமேடு.
137. ,, C. Radhakrishna Mudaliar & Sons, Madras-1.
138. ,, ஸ்ரீலஸ்ரீ. ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் சன்னிதானப், பெரிய காஞ்சிபுரம்.
139. ,, K. P. சந்திரகாசன், ஸ்ரீதரன் மோடார் சர்வீஸ், ஆத்தூர் (சேலம்).
140. ,, ஸ்ரீநாராயணையங்கார், பெருமாள்கோயில் கோட்டை, ஈரோடு.
141. ,, லக்ஷ்மீநாராயணன், ஜனார்தன மில்ஸ் க்வார்டர்ஸ், சிங்கநல்லூர், கோவை.
142. ,, S. Rangarajayyangar, Madurai.

ஸ்ரீரஸ்து

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்

ஆண்டாளெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

உபந்யாஸகர்களுக்கு உபகாரகமான வெளியீடுகளில்

பத்தொன்பதாம் வெளியீடு

# 1. சோபகிருதாண்டு மார்கழி விருந்து
# ௨. ஸதுபந்யாஸ ரத்னமாலை

ஆசிரியர் :

ஸ்ரீ காஞ்சி பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர்

திருவல்லிக்கேணி M. W. N. பிரெஸ்ஸில் அச்சிடுவிக்கப்பட்டது.

ஸ்ரீராமாநுஜன் வெளியீடு

சோபகிருத் ௵ மார்கழி ௴

இதன் விலை 75 ந.பை.

1964

# முப்பது நிமிஷத்திலநுபவிக்கும் சங்கத்தமிழ்மாலைமுப்பது.

## திருப்பாவையில் ஒவ்வொரு பாசுரத்திலிருந்தும் ஒவ்வொரு திருநாமத்தினநுபவம்

— நல்வார்த்தை நானூறு தொடர்ச்சி —

249. [மார்கழித் திங்கள்.] நந்தகோபன் குமரன்—மேலே 'நாராயணனே' என்று சொல்லுவதில் உபயஸமாஸங்களினால் பரத்வ ஸௌலப்யங்களிரண்டும் தோன்ற நின்றாலும் பரத்வமே பொலிந்திருக்குமதில். ஸௌலப்யம் மட்டுமே பொலிய நிற்கும் திருநாமமே கண்ணபிரான் உகந்தருளுமதாதலால் முந்துறமுன்னம் நந்தகோபன்குமரனெனப்பட்டது. ஸகலஜகத்காரணபூதனென்றும் ஸகலஜகத்ரக்ஷகனென்றும் பெருமை பெற்ற எம்பெருமான் தனக்கும் ஒரு காரணபூதனிருப்பதாகக் காட்டியும், "காப்பாருமில்லை கடல்வண்ணா உன்னைத் தனியே போயெங்குந் திரிதி" என்று சொல்லும்படியாக *காக்குமியல்வினனான தானும் ஒரு ரக்ஷகனைத் தேடியுமிருக்குமிருப்பு மிகவற்புதமன்றோ. இவ்விருப்பையன்றோ எம்பெருமான் தவஞ் செய்து பெறுகிறான். எம்பெருமான் பெருமைகளை அளவுகடந்து பேசின வேதாந்தங்களும் ப்ரஹ்மஸூத்ரமும் இப்பெருமையைப் பேசிக் களிக்கும் பாக்கியம் பெற்றிலவே. "மகனொருவர்க்கல்லாத மாமேனி மாயன் மகனாம்" என்று முதலாழ்வார்களும், *உயிரளிப்பா னெந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா!* என்று நம்மாழ்வாரும் மற்றுள்ள ஆழ்வார்களும் பேசிக்களித்த வழியையே பின்பற்றி ஆண்டாள் தலைநீர்ப்பாட்டிலே *நந்தகோபன் குமரன்* என்று பேசிக் களிக்கின்றாளாயிற்று. (1)

250. [2. வையத்து வாழ்வீர்காள்.] *பாற்கடலுள் பையத்துயின்ற பரமன்.* ஆர்த்த ரக்ஷண தீக்ஷிதனான எம்பெருமான், தாமரைமலர்வேண்டி வானத்தே நிற்பவன்போல் சேணுயர் வானமாகிற வைகுந்த நாட்டிலிருந்தால் காரியமாகாதெனக் கருதி ஆர்த்தர்களின் கூக்குரல் செவிப்படுமாறு இவ்வண்டத்திற்குட்பட்ட திருப்பாற்கடலுக் கெழுந்தருளி அங்கு "உறங்குவான்போல் யோகுசெய்த பெருமானாயிருப்பன். அங்குப் பிராட்டிமார்போகத்தில் திருவுள்ளமூன்றாது ஆர்த்தர்களின் கூக்குரல் கேட்பதிலேயே செவியை ஊன்றவைத்திருப்பனென்பது பையத் துயின்ற என்பதனால் விளங்கும். ஒரு மாணிக்கத்தைத் தனிப்படக் கையில் வைத்துக் கொண்டிருப்பதிற்காட்டிலும் தகட்டி லழுத்தினால் அது புகர் பெற்றுத் தோற்றுமாபோலே எம்பெருமான் திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான்மீது சாய்ந்தபிறகு திருமேனி புகர் பெற்றுப் பரமனென்னலாயினன். திருக்கண்வளர்ந் தருளும்போதும் "ஸ்ரீமாந் ஸுக ஸுப்த:" என்னும்படி அழகு விஞ்சியிருத்தலாலும், *ஸுகஸுப்த: பரந்தப:* என்னும்படி பராக்ரமமும் குறையற்றிருப்பதனாலும் துயின்ற பரம னென்றது.

251. [3. ஓங்கியுலகளந்த.] உத்தமன்—உலகத்திலுள்ள மனிதர்களில் சிலர் உத்தமராகவும், சிலர் மத்யமராகவும், சிலர் அதமராகவும், சிலர் அதமாதமராகவும் வழங்கப் பெறுவர்கள். தாம் கெட்டும் பிறரை வாழ்விப்பவர் உத்தமர். தாம் வாழவேண்டியதை முக்கியமாகக் கொண்டு, பிறரும் வாழ்ந்தால் வாழட்டுமென்றிருப்பவர் மத்யமர். பிறரைக் கெடுத்துத் தாம் வாழ்பவர் அதமர். பிறரையுங் கெடுத்துத் தாமும் கெடுபவர் அதமாதமர். எம்பெருமான் மாவலியிடத்தில் தான் யாசகனாய்ச் சென்றது தேவேந்திரனை வாழ்விப்பதற்காகவே யாதலால் தான் கேடு அடைந்தும் பிறரை வாழ்வித்தபடியாலே புருஷோத்தமனென்று பேர் பெற்றனன். தன்னுடைய பரத்துவத்தை நோக்கி மேருபர்வதகைலாஸ ஸௌராஷ்டிகளைப்போலே அருமைப்பட்டிராமே ஆச்ரித ஸுலபனாயிருப்பதுபற்றியும் உத்தமனெனப்படுவன்.

252. [4: ஆழிமழைக்கண்ணா.] பாழியந்தோளுடைப் பற்பநாபன் = மிடுக்கும் அழகும் பொருந்திய தோள்களையுடைய பத்மநாபன். எம்பெருமானுடைய திருத்தோள்களின் அழகையும் மிடுக்கையும் திருவரங்கக் கலம்பகத்தில் பிள்ளைப் பெருமாளையங்கார் அற்புதமாகப் பேசியுள்ளார். பதினறடி வேங்கைப் புலி யென்னும்படியான புயவகுப்புச் செய்யுளில் "நகு கதிர்வழங்கு தகடுபடு செம்பொன் நவமணி குயின்ற தொடியணி யணிந்து ககனவிலிடு நீல வெற்பொத்திருந்தன......அழகிய மணவாளர் கொற்றப் புயங்களே" என்பதனால் திருத்தோள்களினழகு பேசப்பட்டது. மேல், "அருமறை துணிந்த பொருள் முடிவை யின்சொலமுதொழுகுகின்ற தமிழினில் விளம்பி யருளிய சடகோபர் சொல் பெற்றுயர்ந்தன...அழகிய மணவாளர் கொற்றப் புயங்களே" என்பதனால் அத்திருத்தோள்களின் மிடுக்கு பேசப்பட்டது. எம்பெருமானது திருத் தோள்கள் நம்மாழ்வாருடைய திருவாக்கில் புகுந்து புறப்பட்டதனால் மிடுக்குப் பெற்றனவென்றது உண்மை.

253. [5. மாயனை.] * தாயைக் குடல் விளக்கஞ்செய்த தாமோதரன் *—தாமோதரனென்பதற்கு யசோதையினால் தன் திருவயிற்றில் தாம்பினால் கட்டுண்டவனென்பது பொருள். இது எதற்காக வென்று ஆராய்ந்தால் வெண்ணெய் களவு கண்டதற்காகவென்று "மத்துறு கடை வெண்ணெய் களவினிலுரவிடையாப்புண்டு" என்ற நம்மாழ்வார் பாசுரத்தினாலறிகிறோம். கண்ணனுக்கு வெண்ணெய் வேண்டியிருந்தால் அதைக் களவு செய்து தானே புஜிக்கவேணும்? மனைதோறுஞ் சென்று வாய் திறந்து கேட்டால் 'உன் முகம் மாய மந்திரந்தான் கொலோ!' என்றீடுபட்டிருக்கு மிடைச்சிகள் வாய் நிறையவும் கை நிறையவும் கொடுக்கமாட்டார்களா? யசோதை தான் கொடுக்கமாட்டாளா? எதற்காகக் களவு காணவேணும்? களவு செய்தானென்பது நம்பத் தகுந்ததாக இல்லையே! என்று சிலர் சங்கிப்பர்கள். இங்கு உண்மை யாதெனில்; கண்ணனுக்கு வெண்ணெயமுது செய்யவேணுமென்பது முக்கியமன்று. தாம்பாலாப்புண்டு கிடந்து தன்னுடைய எளிவைக் காட்டவேணுமென்பதும், அதனால் ஆழ்வார் போல்வாரை மயக்கவேணுமென்பதும் அவனுக்கு முக்கியமான நோக்கம். வெண்ணெயை இரந்து பெற்றால் கட்டுண்டு கிடக்க நேராதன்றே. அதிலிருந்து தாமோதரனென்ற ஒரு திவ்ய நாமமும் தோன்றிற்று. யசோதைப் பிராட்டி எம்பெருமானைப் புதல்வனாகப் பெற்றாளென்கிற சிறப்புக்கு மேற்பட, அவனைக் கட்டவுமடிக்கவு மதிகாரம் பெற்றாளென்கிற சிறப்பு மெய்தினாள். அதனால் * தாயைக் குடல் விளக்கஞ் செய்த தாமோதரனாயினன்.

254. [6. புள்ளுஞ்சிலம்பினகாண்.]—வெள்ளத்தரவில் துயிலமர்ந்தவித்து—எம்பெருமான் விபவாவதாரங்கள் செய்தருளத் திருவுள்ளம் பற்றினால் திருப்பாற்கடலிலிருந்து புறப்பட்டுச் செய்தருள்வதாக நூற்கொள்கை. "ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:, நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்." [ஹரிவம்சே] என்கிற பிரமாணம் இதனை வற்புறுத்தும். கண்ணபிரான் க்ஷீராப்தியிலிருந்து பயணமெடுத்துவிட்டே வடமதுரையில் வந்து சேர்ந்ததாக இதில் சொல்லிற்று. ஆகவே திருப்பாற்கடலில் கிடை அவதார கந்த மென்றதாயிற்று. அது தோன்றவே இங்கு 'வித்து' என்றது. பரம வைதிகர்கள் இரவில் சயனிக்கும்போது "க்ஷீரஸாகரதரங்க சீகராஸாரதாரகித சாருமூர்த்தயே, போகி போக சயநீயசாயிநே மாதவாய மதுவித்விஷே நம:" என்னுமிந்த சுலோகத்தை யநுஸந்தித் திருந்து, பின் மாலை பள்ளியுணரும்போது "பனிக் கடலில் பள்ளி கோளைப் பழகவிட்டோடி வந்து, என் மனக்கடலில் வாழவல்ல மாய மணாளநம்பீ, தனிக் கடலே தனிச் சுடரே தனியுலகே யென்றென்று, உனக்கிடமாயிருக்க என்னை யுனக்குரித்தாக்கினையே" என்னுமிந்தப் பாசுரத்தை யநுஸந்தித்துக் கொண்டு எழுந்திருப்பவர்களாதலால் இங்கு "வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினையுள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும் மெள்ள வெழுந்து" எனப்பட்டது.

255. [7. கீசுகீ சென்றெங்கும்.]—கேசவனைப்பாடவும். கேசவத் திருநாமத்திற்குப் பல பொருள்களுண்டு. சில பொருள்கள் கேளீர். விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் கேசவ

நாமம் வருமிடத்து ஆதி சங்கராசாரிய ஸ்வாமிகள் தமது பாஷ்யத்தில் ஹரிவம்சத்திலிருந்து கதை காட்டியுள்ளார். ஸ்ரீ மஹாவிஷ்ணுவுக்குக் கேசவனென்று பெயர் கொடுத்தவன் பரமசிவன். அந்தப் பெயரைக் கொடுக்கும்போது *கோ ப்ரஹ்மேதி ஸமாக்க்யாத ஈசோஹம் ஸர்வ தேஹிநாம், ஆவாம். தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவ நாமவாந்* என்று சொல்லிக்கொண்டே கொடுத்ததாக ஹரிவம்சத்திலுள்ளது. எனவே அயனுக்கும் அரனுக்கும் உத்பாதகன் என்றதாயிற்று. (2) எழிலுடைய வம்மனேமீர்! என்னரங்கத் தின்னமுதர் குழலழகர்* என்று ஆண்டாள் பணித்தபடியே *ப்ரசஸ்த கேசன் என்றுமாம். (3) க்ருஷ்ணாவதாரத்தில் திருவாய்ப்பாடியில் குதிரை வடிவங் கொண்டு நலியவந்த கேசியென்னு மசுரனை வதைத்தவனென்றுமாம். (4) "கேசவ: க்லேச நாசந:" என்கிறபடியே ஸகல க்லேசங்களையும் போக்குபவ னென்றுமாம்.

256. * (8. கீழ்வானம்)—மல்லரை மாட்டிய தேவாதி தேவன்*—க்ருஷ்ணாவதாரத்தில் மல்லரை மாளச் செய்தது இரண்டு ஸந்தர்ப்பங்களில்; முதல் ஸந்தர்ப்பம் "வார்கடா வருவி யானை மாமலையின் மருப்பிணைக் குவடிறுத்துருட்டி, ஊர் கொள் திண்பாகனுயிர் செகுத்து அரங்கின் மல்லரைக் கொன்று" என்ற திருவாய்மொழிப் பாசுரத்தின் படியே வில்விழவென்கிற வியாஜத்தினால் கம்ஸன் அக்ரூரரைத் திருவாய்ப்பாடிக்கு அனுப்பி ஸ்ரீ க்ருஷ்ணபலராமர்களை மதுரைக்கு வரவழைத்தபோது கம்ஸனால் தன்னுடைய அரண்மனை வாசலில் தன்னை (கண்ணனை)க் கொல்லும்பொருட்டு நிறுத்திவைக்கப் பட்ட சாணூர முஷ்டிகர்களென்னும் மல்லர்களை முடித்தது முதல் ஸந்தர்ப்பம். "தூதிற் சென்று அப்பொய்யறைவாய்ப் புகப்பெய்த மல்லர் மங்கக் காய்ந்தானை" என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடியே கண்ணன் பாண்டவ தூதனாய் எழுந்தருளினகாலத்துத் துரியோதனன் தனது ஸபையில் பெரிய நிலவறையொன்றைத் தோண்டுவித்து அதில் ஆயுதபாணிகளான மல்லர்களை நிறுத்தி மேலே பொய்யாஸன மிட்டுவைத்து அதன்மீது கண்ணபிரானை வீற்றிருக்கச் செய்ய, ஆஸனம் உள்ளிறங்கினவாறே அங்கிருந்த மல்லர்கள் தன்னை வதைக்கப் போர் புரிய முயன்றவளவிலே "அரவு நீள் கொடியோனவையுளாசனத்தை அஞ்சிடாதேயிட, அதற்குப் பெரிய மாமேனி அண்ட மூடுருவப் பெருந்திசையடங்கிட நிமிர்ந்தோன்" என்று திருமங்கையாழ்வார்தாமே யருளிச் செய்தபடி கண்ணன் விச்வரூபமெடுத்து அந்த மல்லர்களை முடித்தது இரண்டாவது ஸந்தர்ப்பம். கச்சிப் பாடகம் என்று பிரஸித்தமான காஞ்சீபுரத் திருப்பதியில் பாண்டவதூதப் பெருமாள் ஸேவை ஸாதித்தருள்வது இந்தத் திருக்கோலமே. பாடகம்—பாடு தோற்ற (பெருமைபொலிய) எழுந்தருளியிருக்குமிடம்.

257. [*9. தூமணி மாடத்து.] *மாமாயன்*=எம்பெருமானுக்கு மாயன் என்றொரு திருநாமமும், மாமாயனென்றொரு திருநாமமும் ப்ரஸித்தம். ஆச்சரியமான செயல்களைச் செய்பவன், மிகவும் ஆச்சரியமான செயல்களைச் செய்பவன் என்பது முறையே பொருள். கண்ணபிரான் செய்தருளின செயல்களில் ஆச்சரியமல்லாதது எதுவுமில்லை. சில வாச்சரியச் செயல்களை இங்கு அநுபவிப்போம். தான் இயற்கையிலேயே ஸர்வஜ்ஞனாய் "மிகுஞானச் சிறு குழவி" என்னும்படி யிருந்தும் குருமுகமாகவே கல்வி கற்கவேணுமென்கிற முறையை உலகில் பிரசாரம் செய்யும் பொருட்டுத் தான் குருமுகமாகக் கல்வி கற்கவேண்டி உஜ்ஜயினி யென்னும் அவந்திகாபுரிக்குச் சென்று அங்கு ஸாந்தீபநிமுனிவர் பக்கலில் ஸகல சாஸ்திரங்களையும் அறுபத்து நான்கு நாளைக்குள் அதிகரித்து விடை பெறுங்காலத்திலே குரு தக்ஷிணை ஸமர்ப்பிக்க வேண்டினவளவில் அவ்வாசாரியர் கண்ணபிரானுடைய அதிமாநுஷ சேஷ்டித சக்தியை அறிந்தவராகையாலே பன்னிரண்டு வருடங்களுக்கு முன்பு ப்ரபாஸ தீர்த்த கெட்டத்திற் கடலில் மூழ்கி இறந்துபோன தன் புத்திரனைக் கொணர்ந்து தருமாறு வேண்ட, கண்ணன் அப்படியே யென்று சொல்லி அத்தீர்த்த கெட்டத்திற் சென்று, சங்கின் ரூபம் தரித்துக் கடல் நீரில் வாஸஞ் செய்கின்ற பஞ்சஜனன் என்னுமஸுரனே அப்புத்திரனைக் கொண்டுபோனதாக அறிந்து அவனைக் கொன்று யமபட்டணத்துக் கெழுந்தருளி அங்கு யாதனையிற்கிடந்த அக்குமாரனைப் பூர்வ ரூபத்தில் சிறிதும் வாசியின்றிக்கே கொண்டுவந்து கொடுத்தருளினன். "மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல்வாய் மாண்டானை, ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தான்" என்று பெரியாழ்வாரும், "மந்து நூலும் முப்புரிநூலும் முன்னீந்த அந்தணாளன் பிள்ளையை அந்நான் றளித்தான்" என்று திருமங்கையாழ்வாரு மருளிச் செய்தவை காண்க.

ஒரு பிராமணனுக்கு முறையே பிறந்த மூன்று பிள்ளைகள் பிறந்தவப்பொழுதே பெற்றவளுட்பட முகத்தில் விழிக்கப் பெறுதபடி இன்ன விடத்திலே போயிற்றென்று தெரியாமல் காணவொண்ணுது போய்விடுகையாலே நான்காம் பிள்ளையை அவன் மனைவி பிரஸவிக்கப் போகிறவளவிலே அவ்வந்தணன் கண்ணபிரானிடம் வந்து 'இந்த ஒரு பிள்ளையையாயினும் தேவரீர் பாதுகாத்துத் தந்தருளவேண்டும்' என்று பிரார்த்திக்க, கண்ணபிரான் அப்படியே யென்றிசைந்த பின்பு ஒரு யாகத்திலே தீக்ஷிதனுயுள்ள அக்கண்ணன் எழுந்தருளக்கூடாதென்பது பற்றி அர்ஜுனன் தான் சென்று ரக்ஷிப்பதாகச் சொல்லிப் பிராமணனையுங் கூட்டிக்கொண்டு போய்ப் பிரஸவக்ருஹத்தைச் சுற்றும் காற்றுமுட்படப் பிரவேசிக்கவொண்ணுதபடி சரக்கூடங்கட்டிக் காத்துக்கொண்டு நிற்கையில் பிறந்த பிள்ளையும் வழக்கப்படியே பிறந்தவளவிற் காணவொண்ணுது போய்விடவே அந்த பிராமணன் வந்து அர்ஜுனனை மறித்து 'க்ஷத்ரியாதமா! உன்னுலே யன்றோ என் பிள்ளை போம்படியாயிற்று; கண்ணன் எழுந்தருளிக் காப்பதை நீ யன்றோ தடுத்தாய்' என்று நிந்தித்துக் கண்ணன் பக்கலிலே யிழுத்துக்கொண்டுவர, கண்ணபிரான் கண்டு புன்சிரிப்புக்கொண்டு 'அவனை விடு, உனக்குப் பிள்ளையை நான் கொண்டுவந்து தருகிறேன்' என்றருளிச் செய்து, பிராமணனையும் அர்ஜுனனையும் தன்னுடன் கொண்டு தேரிலேறி அர்ஜுனனைத் தேர் செலுத்தச் சொல்லி அத்தேர்க்கும் அவர்கட்கும் திவ்ய சக்தியைத் தனது ஸங்கல்பத்தாற் கற்பித்து இவ்வண்டத்துக்கு வெளியே நெடுந்தூரமளவும் கொண்டுபோய் அங்கு ஓரிடத்தில் தேருடனே இவர்களை நிறுத்தி, தேஜோரூபமான பரமபதத்திலே தன்னிலமாகையாலே தானே போய்ப்புக்கு, அங்கு நாச்சிமார் தங்கள் ஸ்வாதந்திரியங் காட்டுகைக்காகவும் கண்ணபிரானது திவ்ய ஸௌந்தரியத்தைக் கண்டு களிக்கைக்காகவும் அழைப்பித்து வைத்த அந்தப் பிள்ளைகள் நால்வரையும் அங்கு நின்றும் பூர்வ ரூபத்தில் ஒன்றுங் குலையாமல் கொண்டுவந்து கொடுத்தருளினனென்ற சரித்திரமும் மிக வாச்சரியமானதே. "படர்புகழ்ப் பார்த்தனும் வைதிகனுமுடனேறத் திண்டேர்கடவிச் சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியில் வைதிகன் பிள்ளைகளை உடலொடுங் கொண்டு கொடுத்தவன்" என்று நம்மாழ்வாரும், "பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும், இறைப் பொழுதிற் கொணர்ந்து கொடுத்தொருப்படுத்தவுறைப்பன்" என்று பெரியாழ்வாருமருளிச் செய்தவை காண்க.

258. [10. நோற்றுச் சுவர்க்கம்.] *நாற்றத் துழாய் முடிநாராயணன்—"தோளிணை மேலும் நன்மார்பின்மேலும் சுடர் முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மான்" (திருவாய்மொழி) என்னப்பட்ட எம்பெருமான் திருத்துழாயணிந்து கொண்டிருப்பதாகச் சொல்லப்பட்டாலும் அது உபலக்ஷணமாகி, செண்பக மல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி முதலிய பூக்களணியப் பெற்றவனென்கை. நரஸிம்ஹபகவான் திருவவதரித்தது ஸ்வாதீ நக்ஷத்திரத்திலாயினும் "திருவோணத் திருவிழவிலந்தியம்போதில் அரியுருவாகி" (திருப்பல்லாண்டு) என்று திருவோண நக்ஷத்திரத்தில் அவதரித்ததாகச் சொல்லப்படுகிறது. கண்ணபிரான் திருவவரித்தது ரோஹிணீ நக்ஷத்திரத்திலாயினும் "நீ பிறந்த திருவோணம் இன்று நீ நீராட வேண்டும்" எனப்படுகிறது. பகவான் அவதரிக்கும் நக்ஷத்திரம் எதுவாயினும் "ச்ரோண நக்ஷத்ரம் விஷ்ணுர் தேவதா" என்ற வேதத்தின்படி விஷ்ணு நக்ஷத்ரமாகிய திருவோணத்தின் அம்சமாகவேயிருக்குமென்பர். இதேபோல எம்பெருமானணியும் புஷ்பங்களெல்லாம் திருத்துழாயின் அம்சம் பொருந்தியதாகவேயிருக்குமென்பர். ஆகவே *நாற்றத்துழாய் முடிநாராயணனென்றது பொதுவாகப் புஷ்பங்களணிந்து கொண்டிருப்பவனென்றவாறு. கண்ணபிரான் திருவாய்ப்பாடியினின்று வடமதுரைக்கெழுந்தருளினபோது "நாறிய சாந்தம் நமக்கிறை நல்கென்னத் தேறியவளும் திருவுடம்பில் பூச." என்று பெரியாழ்வாரருளிச் செய்தபடியே கூனி கொடுத்த சந்தனத்தைப் பூசிக்கொண்டபின் பூச்சூட விரும்பி மாலாகாரர் திருமாளிகையைத் தேடிக்கொண்டு சென்று நமக்கும் நம் அண்ணர்க்கும் புஷ்பம் தருவீரோ? என்று கேட்க, அவர் பரமஸந்தோஷத்துடனே 'ப்ரஸாத பரமௌ 'நாதௌ மம கேஹ முபாகதௌ, தந்யோஹமர்ச்சயிஷ்யா மீத்யாஹ மால்யோபஜீவந:..." என்று ஸ்ரீபராசர பகவான் பணித்தபடியே மிகச்சிறந்த புஷ்பங்களை ஸமர்ப்பித்தனனாக, அந்த ஸுகந்தி புஷ்பங்கள் கமழநின்ற திருமுடியை யுடையவனென்கை பூச்சூடல் பதிகத்தில் காணும் புஷ்பங்களெல்லாம் கமழ நின்ற திருமுடியான்.

259. [11. கற்றுக் கறவை.] முகில்வண்ணன்=காளமேகத் திருவுருவன் என்னும் பொருள்மட்டு மன்றிக்கே காளமேகத்தின் இயல்வுகளெல்லா முடையவன் என்னும் பொருளும் ஏற்கும். சில இயல்வுகள் கேண்மின்.

(1) மேகமானது பெய்யவேண்டு மிடமளவும் சென்று பெய்யும். எம்பெருமானும் *வந்தருளியென்னெஞ்சிடங்கொண்ட வானவர் கொழுந்தே* மண்மீதுழல்வாய்* என்கிறபடியே தனது க்ருபாரஸத்தை வர்ஷிக்க வேண்டுமிடங்களேறச் சென்று வாழவுலகினில் பெய்திடுவன். (2) மேகமானது மின்னலுள்ள காலம் நீர்நிரம்பப் பெற்றிருக்கும். எம்பெருமானும் மின்னல்போன்ற பிராட்டியோடு கூடியிருக்குங் காலத்திலே க்ருபாரஸம் விஞ்சியிருக்கப் பெறுவன். (*இந்திரயா தடித்வாந்* என்றார் பட்டர்.) "இவள் ஸந்நிதியாலே காகம் தலை பெற்றது; அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்கிற முமுக்ஷுப்படி திவ்யஸூக்தி காண்க. "ஆவியைச் சனகன்பெற்ற அன்னத்தை அமிழ்தின்வந்த தேவியைப் பிரிந்தபின்னைத் திகைத்தனைபோலுஞ் செய்கை" என்று பெருமானை நோக்கி வாலி கூறினதாகக் கம்பர் பேசியுள்ளதுங் காண்க. அந்தச் செய்யுளின் கருத்தை லக்ஷ்மீஸஹஸ்ரத்தில் *த்வய்யேவாயததே க்ருபா ரகுபதே* என்கிற ச்லோகத்தினால் வேங்கடாத்வரியும் வெளியிட்டார். (3) மேகமானது தான் மொண்ட இடத்திலும் பெய்யும்; எம்பெருமான் தான் ஞான வெள்ளத்தை மொண்டுகொண்ட இடத்திலும் உபதேச வெள்ளத்தைப் பெய்திடுவன். விபவாவதாரத்தில் தனக்கு ஞானமளித்த வஸிஷ்டாதிகளுக்கும் தான் ஞானமளிக்கத் தொடங்கினமை ஸ்ரீ ராமாயண ப்ரஸித்தம். சித்ரகூடத்திலே வஸிஷ்ட முனிவன் பெருமாள் பக்கலிலே சில தர்மஸூக்ஷ்மங்கள் கேட்கப்பெற்றானாயிற்று. *ஸோஹம் தே பிதுராசார்ய: தவ சைவ பரந்தப, மம த்வம் வசநம் குர்வந் நாதிவர்த்தேஸ் ஸதாம் கதிம்* என்று செருக்கிக்கிளர்ந்த வஸிஷ்டனையும் வாய்மூடுவித்தான் இராமபிரான் சில தரும மருமங்களைச் சொல்லி. (4) மேகமானது பெய்யப்பெறாத காலத்திலே வறக்கும்; எம்பெருமானும் அடியார்களுக்கு அருள் செய்யப் பெறாதகாலத்திலே நெஞ்சுலர்ந்து பேசுவன்; த்ரௌபதிக்கு ஆபத்திலே அருகேயிருந்து உதவப்பெறாத குறையினால் *கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம், ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாத் நாபஸர்ப்பதி* என்றானே. (5) மேகமானது இன்னபோது பெய்யுமென்று ஒருவராலும் அறுதியிடவொண்ணாததாயிருக்கும்: பெய்யவேண்டிய காலத்தில் பெய்யாதொழியவும் பெய்வதற்கு ப்ரஸக்தியில்லாத காலத்தில் அசிந்திதமாக வந்து தாராளமாகப் பெய்யவுங்கடவது மேகம். எம்பெருமான்படியு மப்படியே *வந்தாய்போலேவாராதாய் வாராதாய்போல் வருவானே* என்றாரே நம்மாழ்வார். த்ரௌபதிக்கு ஆபத்திலே வந்து முகங்காட்டா தொழிந்தான்; அபேக்ஷா நிரபேக்ஷமாகத் *தாவியன்றுலகமெல்லாம் தலைவிளாக்கொண்டான். (6) 'வனத்திடரை ஏரியாக வெட்டியாயிற்று, நீ மழை பெய்தாகவேணும்' என்று வளைப்பிடவொண்ணாதது மேகம். எம்பெருமான்படியு மப்படியே. 'நாங்கள் கரும ஞான பக்தி யோகாதிகளைக் குறையற அனுட்டித்தாயிற்று, இனி நீ அருள்செய்தே யாகவேணும்' என்று வளைப்பிட்டால் அந்த வளைப்புக் காகக் காரியஞ்செய்யுமவனல்லனே எம்பெருமான். *வனத்திடரை ஏரியாம் வண்ணமியற்று மிதுவல்லால் மாரி யார் பெய்கிற்பார்மற்று* என்றாரே பூதத்தாழ்வார். ஆழ்வானும் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் *யா கர்மணா மதிக்ருதி:* இத்யாதி ச்லோகத்தாலே இதுதன்னை ஸூசிப்பித்தருளினார். *பெண்ணுலாஞ் சடையினானும் பிரமனும் காண்பான் எண்ணிலாவூழியூழித் தவஞ்செய்தார் வெள்கி நிற்பவன்றே விண்ணுளார் வியப்பவந்து ஆனைக்கன்று அருளை யீந்தது. (7) மேகமானது ஜலஸ்தல விபாகமின்றியே எங்கும் பெய்யும்; எம்பெருமானும், வஸிஷ்டன் சண்டாளன் அறிஞர் அறிவிலிகள் என்னும் வாசியின்றிக்கே *அநாலோசித விசேஷாசேஷ லோகசரண்ய!* என்னும்படியே எங்கும் ஒரு நிகராக அநுக்ரஹசீலன். "தாசாய கீசாய ச ராக்ஷஸாய" என்றார் வேங்கடாத்வரி. ஆசார்யஹ்ருதயத்தில் "வேடன் வேடுவிச்சி பக்ஷி குரங்கு சராசரம் இடைச்சி இடையர் தயிர்த்தாழி கூனி மாலாகாரர் பிணவிருந்து வேண்டடிசிலிட்டவர் அவன்மகன் அவன்தம்பி ஆனை அரவம் மறையாளன் பெற்ற மைந்தன்" என்றருளிச்செய்ததொரு கோர்வையைக் காணும்போது நிர்விசேஷமாக அருள் செய்யுமிடம் ஸம்ப்ரதிபந்நமாமே. (8) மேகமானது சில காலங்களிலே கர்ஜித்துப் போய்விடும், பெய்யாது; பெய்யுங் காலத்திலே ஆடம்பரமின்றிக்கே சொரிந்திடும். *கர்ஜதி சரதி ந வர்ஷதி வர்ஷதி வர்ஷாஸு நிஸ்ஸ்வநோ மேக:* என்றான் பண்டிதராஜன்.

எம்பெருமான் குசேலனுக்கு அருள்செய்தபடி இங்ஙனமேயாம். (9) மேகமானது விராடபர்வ காலக்ஷேபத்திற்குவந்து நிற்கும். [விராட பருவம் காலக்ஷேபஞ் செய்தால் மழை பெய்யுமென்பது ப்ரஸித்தமன்றோ]. எம்பெருமான் பகவத் விஷய காலக்ஷேபங்களிலே வந்து நிற்பன். மணவாளமாமுனிகளின் காலக்ஷேப கோஷ்டியிலே * ஸ்ரீசைலேச தயாபாத்ரமென்று கர்ஜித்துக்கொண்டு வந்ததே ஸ்ரீரங்க காளமேகம்.

(10) மேகமானது சுக்திகளிற் பெய்து முத்தாக்கும். * அடியார்க்கு இன்ப மாரியாகிய எம்பெருமானுடைய கடாக்ஷதாரையும் ஆழ்வாராசார்யர்களிடத்தே ப்ரவஹித்து மிக்க பயன்விளைக்கும்; முத்தன்ன வாக்குக்களைப் பயக்கும். (11) மேகமானது * மேகத்தை வேங்கடக்கோன் விடு தூதில் விண்ணப்பம்* இத்யாதிப்படியே தூதுவிடப்பெறும். எம்பெருமான்தானும் * இன்னார் தூதனென நின்றான்; *கோதை வேலைவர்க்காய் மண்ணகலங் கூறிடுவான் தூதனாய் மன்னவனால் சொல்லுண்டானாய். * பாண்டவ தூதனென்றே அழியாதபேர்பெற்று விளங்காநிற்பன். (12) மேகமானது சிலர்க்குத் தீங்கை விளைக்கும், சிலர்க்கு நன்மை பயக்கும். * த்வயி வர்ஷதி பர்ஜந்ய! ஸர்வே பல்லவிதா த்ருமா:, அஸ்மாகமர்க்கவ்ருக்ஷாணும் பூர்வபத்ரேஷு ஸம்சய:* என்றான் ஒரு மஹாகவி. மழைபெய்ய எல்லாமரங்களும் தளிர்க்கும்; எருக்கிலைபோல் வன வீழ்ந்தொழியும். ஆகவே மழை சிலர்க்குத் தீங்கு, சிலர்க்கு நன்மை. எம்பெருமான்படியு மப்படியே. * பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம் * என்று தானே சோதிவாய்திறந்து பணித்தானே. *கஞ்சன்நாள்கவர் கருமுகிலெந்தாய்* * தாயர்மகிழ ஒன்னார்தளர * இத்யாதி. (13) மேகமானது, * எத்தனையும் வான்மறந்தகாலத்தும் பைங்கூழ்கள் மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கு மென்கிறபடியே பயிர்கள் வேறு புகலற்று எதிர்பார்க்கப் பெற்றிருக்கும். எம்பெருமானும் * களைவாய்துன்பம் களையா தொழிவாய் களைகண்மற்றிலேன் * என்று சாதகவ்ருத்திகளான அநந்யகதிகளால் ப்ரதீக்ஷிக்கப்பட்டிருப்பன். (14) மேகமானது விருப்பமில்லாதவன்று எத்தனை கண்ணநீர் விழவிட்டாலும் வாளா கிடக்கும்; எம்பெருமான்படியுமிதுவே. பரதாழ்வான் * ஏபிச்ச ஸசிவைஸ் ஸார்த்தம் சிரஸா யாசிதோ மயா, ப்ராதுச் சிஷ்யஸ்ய தாஸஸ்ய ப்ரஸாதம் கர்த்து மர்ஹஸி * என்று பலருடனே சித்ரகூட பரிஸரத்திலே போந்து கண்ணநீரை விழவிட்டு வேண்டினவிடத்தும் * ஸ காமம் அநவாப்யைவ * என்னும்படியே மநோரதம் நிறைவேறப் பெறுமலே மீண்டு போம்படி யாயிற்றன்றோ. (15) மேகமானது கடலிற்படிந்து அங்கு நின்றும் எழுந்து தோன்றி வர்ஷித்துவிட்டு மீண்டும் கடலிற்புகும்; எம்பெருமானும் அவதாரகந்தமான திருப்பாற்கடலிலே படிந்து * ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந:, நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம்புரீம்* என்கிறபடியே ஸ்ரீராமக்ருஷ்ணாதி ரூபேண தோன்றிக் கண்காணவந்து க்ருபாரஸத்தை வர்ஷித்துவிட்டு மீண்டுமங்கே புகுவன். நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் *பின்துரக்குங் காற்றிழந்த சூல் கொண்டல் பேர்ந்தும் போய், வன்திரைக்கண் வந்தணைந்தவாய்மைத்தே* என்ற பாசுரத்தினால் இவ்வர்த்தத்தை விளக்கியருளினமை காண்க. (16) மேகமானது தான் தோன்றினவாறே மயில்களைச் சிறகு விரித்து ஆடப்பண்ணும். *கார்முகில்போல் வண்ணன் கண்ணனெம்மானைச் சொல்லிப்பாடி யெழுந்தும் பறந்தும் துள்ளாதார் தம்மால் கருமமென்சொல்லீர்* என்கிற திருவாய்மொழியின்படியே எம்பெருமானைக் கண்டமாத்திரத்திலே தத்பக்ஷபாதிகள் எழுந்தும் பறந்தும் துள்ளுவர்கள்:

260. *(12. கனைத்திளங்கன்று)—தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கினியான்=இராமபிரான் மனத்துக்கினியானென்பதைப் பலபடியாக மூதலிக்கலாம். ஒன்றிரண்டிடங்களே கொள்வோம். மனத்துக்கினியானாக ஒருவன் இருக்க வேணுமானால் அவன் "ஸமஸ்த கல்யாண குணாம்ருதோததி:" என்கிறபடியே கல்யாண குணக் கடலாக இருக்கவேண்டும். அக்குணங்களில் பரம காருணிகத்வம் மிக ப்ரசஸ்தமானது. அஃதுள்ளது இலங்கைக் கோமானைச் செற்ற இராமபிரானுக்கே யென்பது ஸுப்ரஸித்தம். இலங்கைக் கோமானைச் செறுவதற்கு முன்பு அதற்கு அங்கமாக வாலிவதம் செய்தார் பெருமாள். அப்போது ஸுக்ரீவ மஹாராஜர் பழைய நேச நிலைமைகளை நினைத்துப் பலபல பேசிப் புலம்பியழுதார். அப்போது பெருமாளுடைய நிலை என்னாயிற்றென்பதைக் காட்டுகின்ற வான்மீகிமுனிவர் "ஸஞ்ஜாத பாஷ்ப: பரவீரஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ" என்றார். ஜாத பாஷ்போ பபூவ; ஸஞ்ஜாத பாஷ்போ பபூவ;

விமநா பபூவ. "உள்ளெலாமுருகிக் குரல் தழுத்தொழிந்து உடம்பெலாங் கண்ண நீர் சோர" என்னும்படி பக்தர்கள் என்ன பாடு படுவர்களோ அந்த பாடன்றோ பெருமாள் பட்டார். இதனில் மிக்க மஹாகுணமுண்டோ? இனி இராவணனோடு போர்புரியுங் காலத்திலே [*கச்சாநுஜாநாமி.] 'இன்றுபோய் நாளைவா என்றையே ராகவா!' என்னும்படி காட்டின மஹாகுணத்தைப்பற்றிக் கூரத்தாழ்வான் "கோயம்! குண:! கதரகோடிகத: கியாங் வா! கஸ்ய ஸ்துதே: பதம்! அஹோ! பத கஸ்ய பூமி:!" என்று மிகமிக வியக்கிறார். இனி ராவண வதத்தின் பிறகு காட்டியருளின வொரு மஹா குணத்தைக் கேண்மின்;

"மரணாந்தாநி வைராணி நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜநம், க்ரியதாமஸ்ய ஸம்ஸ்காரோ மமாப்யேஷ யதா தவ" என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்தை பரமரஸமாக வியாக்கியானித் தருளினர் நம்பிள்ளை. இராவணன் மாண்டபின்பு இந்த மஹா பாபிக்கு நான் உத்தரக்ரியை பண்ணமாட்டேனென்று ஒரு நிலைநின்ற விபீஷணாழ்வானை நோக்கிப் பெருமாளருளிச் செய்த ச்லோகமிது. இதற்குப் பிறர் கூறும் பொருள் எங்ஙனே யென்னில்; உலகத்தில் ஒருவனிடத்து ஒருவனுக்குப் பகை மரண பர்யந்தமேயாதலால் இந்த இராவணன் மாண்டொழிந்த பின்பும் இவனிடத்து நாம் பகை வைப்பது ஏதுக்கு? இவனை வதை செய்வதும் பிராட்டியைக் கைக்கொள்வதுமே நமக்குப் பிரயோஜனமாதலால் அது நிறைவேறப்பெற்ற பின்பும் இவன்மீது நாம் பகை பாராட்டலாகுமோ? பகையை மறந்து இனி இவனுக்குச் செய்யவேண்டியதைச் செய்—என்று பெருமாள் கூறுவதாக. இப்பொருள் சிறிதும் பொருந்தாதென்றும் இராமபிரானுடைய திருவுள்ளத்திற்கு ஒவ்வாதென்றும் நம்பிள்ளை திருவுள்ளம்பற்றி வேறு வகையாக வியாக்கியானித்தருளினர். இதுவரையில் பெருமாள்மீது இராவணன் பகை பாராட்டியிருந்தானே யல்லது இராவணன்மீது பெருமாள் சிறிதும் பகை பாராட்டியிருந்ததில்லை—"விபீஷணோ வா ஸுக்ரீவ! யதிவா ராவணஸ் ஸ்வயம்" என்றருளிச்செய்த பெருமாளுடைய திருவுள்ளத்திற்கு இணங்கவல்ல பொருளன்றோ பணிக்கவேணும். அதை நம்பிள்ளையல்லது வேறொருவர் பணிக்க முடியுமோ? இங்கு நம்பிள்ளை ஸ்ரீ ஸூக்திகள் அமுதமயமேயாதலால் அவை அப்படியே காட்டப்படுகின்றன:—"[மரணாந்தாநி வைராணி] ரிஷிகளின் குடியிருப்பை யழித்து மைதிலியைப் பிரித்து, நம் உயிர் நிலையிலே நலிந்தாப்போலே ஸ்ரீ ஜடாயு மஹாராஜரை நலிந்து இவையெல்லாம் செய்யமாட்டானே இவனினி. [நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜநம்.] இவன் ஜீவிக்கிற நாளிலே நாம் செய்யும் நன்மை இவன் விலக்காதொழிவது காணவெண்ணியிருந்தோம்; அது அந்நாளில் பெற்றிலோம்: நாம் தேடியிருந்தது முந்துற முன்னம் ஸித்திக்கப் பெற்றோமிறே. [க்ரியதாம் அஸ்ய ஸம்ஸ்கார:] இவன் நாம் செய்யும் நன்மை விலக்காதானளவு பிறந்தவின்றும் இழக்கவேணுமோ? வேண்டுவன செய்யப்பாரும். [மமாபி ஏஷ யதா தவ.] நீர் இருய்த்திருந்தீராகில் குடல் துடக்குடையாரிலே ஒருவன் செய்யுமித்தனையன்றோ; நாம் இவனுக்கு வேண்டுவன செய்ய நீர் பின்னைக் கடக்கநில்லீர் என்றாரிறே." இந்த திவ்ய ஸூக்திகளின் தாத்பர்ய ஸாரமாவது—விபீஷணா! இவ்விராவணன் ஜீவித்திருக்கும் நாளிலேயே இவனுக்குச் சில நன்மைகள் நான் செய்யக் கருதியிருந்தேன்; அவை ஈடேறுதபடிக்கு இவன் பலவகையான த்வேஷ காரியங்களை இயற்றி வந்தானாதலால் நம்முடைய மனோரதம் நிறைவேற வழியில்லையாகிறதே யென்று வருத்தப்பட்டே நான் காலங்கழிக்க நேர்ந்தது. இப்போது இவன் மரண மடைந்து விட்டானாதலால் இனி ஒருவிதமான த்வேஷகாரியமும் இவன் பண்ண ப்ரஸக்தியில்லையே. நாம் இவனுக்குச் செய்ய நினைத்த நன்மைகளுக்கு இவன் ஆபிமுக்கியம் பண்ணாதொழிந்தாலும் இவற்றைத் தடை செய்ய மாட்டாத நிலைமைக்கு இப்போது வந்திட்டானன்றோ, சேதநர்களிடத்தில் இவ்வளவுதானே நான் எதிர்பார்த்திருப்பது, அதுவோ கைபுகுந்து விட்டது. இவனுடைய உயிருக்கு நன்மை செய்ய நினைத்திருந்தபடி செய்ய இழந்த குறைதீர இவனுடலுக்காவது சில நன்மைகளைச் செய்யாய்; நீ செய்யப் பின்வாங்கினாயாகில் இதோ நான் செய்யக் காத்திருக்கிறேன்; நீ எப்படி எனக்கு ஆப்தனோ அப்படி இவனும் எனக்கு உன்னையிட்டு ஆப்தன்தானே—என்பதாம். இங்ஙனே பேசுபவனன்றோ மனத்துக்கினியான்.

*261.* [13. புள்ளின்வாய் கீண்டானை.]—பொல்லாவரக்கனைக் கிள்ளிக் களைந்தான்—இராவணனை அவலீலையாகத் தலை துணித்துத் தொலைத்தவன் என்று பொருள்பட

நின்றது. ஆனுல் கதா ஸந்தர்ப்பங்களைப் பார்க்கும்போது ராவண ஸம்ஹாரத்தைப் பெருமாள் வெகு சிரமப்பட்டுச் செய்ததாகத் தெரியவருகின்றதே; திருப்பாணாழ்வாரும் *சதுரமாமதில் சூழிலங்கைக் கிறைவன் தலை பத்து உதிர வோட்டி ஓர் வெங்கணை யுய்த்தவன்* என்று அநாயாஸக்ருதமாகவே யருளிச் செய்யக் காண்கிறோம். அறுத் தறுத்து வீழ்த்திய தலைகளெல்லாம் மீண்டு மீண்டும் முளைத்தெழுந்ததாகவும், அகஸ்திய முனிவர் வந்து ஆதித்யஹ்ருத யோபதேசம் செய்யப் பெற்றதாகவும்......... மற்றும் பலவாறுள்ள கதாசரீரங்களைக் காணும்போது 'பொல்லாவரக்கனைக் கிள்ளிக் களைந்தான்' என்பது உபசார வார்த்தை போல் நினைக்க வேண்டியதாகிறதேயென்றும் பலர் சங்கிப்பர்கள். ராவண ஸம்ஹாரத்தில் பெருமாள் தாமதித்தாரென்பது உண்மையே. இது சௌர்ய வீர்ய பராக்ரமங்களில் குறையினாலன்று. எப்படியாவது இராவணன் உடன்பட்டு வழிபட்டு உஜ்ஜீவிக்கவும் ப்ராப்தமாமோ? என்கிற நசை பெரு மாளுக்கு இருந்தது. இல்லையாகில் "விபீஷணோ வா ஸுக்ரீவ! யதிவா ராவணஸ் ஸ்வயம்'' என்று அவர் திருவாக்கில் வந்திருப்பது அப்ரஸக்தமாகும். விபீஷணாழ்வா னுக்கு அபயமளித்து அவனை அழைத்து வரும்படி ஸுக்ரீவ மஹாராஜர்க்குக் கட்டளை யிடுமிடத்துப் பெருமாள் இங்ஙனே சொல்லியுள்ளார். வந்தவன் விபீஷணனன்றிக்கே இராவணனே மாறு வேஷம் பூண்டு வந்திருப்பதாகத் தெரிந்தாலும் அவனைச் சேர்த்துக் கொள்வதைப்பற்றிப் புநர் விசாரணை வைத்துக் கொள்ளாமல் விடாதே அழைத்துவா என்றருளிச் செய்த பெருமாளுடைய திருவுள்ளத்தை நம் ஆசாரியர்கள் கண்டறிந்து வெளியிட்டிருப்பது அற்புதம்; (அதாவது) "விபீஷணாழ்வானைப் பரிக்ரஹித்தால் அவனும் அவனோடு வந்த நால்வருமேயாயிற்று வாழ்ந்து போவது; ராவணனைப் பரிக்ர ஹித்தால் லங்கையாக வாழ்ந்து போமிறே'' என்று. ஆகவே இராவணனுடைய ஆபி முக்யம் எவ்வழியினாலாயினும் கிடைக்குமா வென்று எதிர் பார்த்திருந்தவர் பெருமாள் என்பது நன்கு விளங்கும். அதற்காகவே அவனை வதைக்கத் தாமதித்தபடி. இராவண னைக்காட்டிலும் பன்மடங்கு வலிமை மிக்கவனென்று பிரஸித்தி பெற்றிருந்த வாலியை அநாயாஸமாக முடித்தவர் பெருமாள். திருவடி இராவணனுக்கு ஹிதோபதேசம் செய் கையில் "த்வயா விஜ்ஞாத பூர்வச் ச வாலீ வாநர புங்கவ:, ராமேண நிஹதஸ் ஸங்க்யே சரேணைகேந வாநர!.'' என்று, அப்பா ராவணா! வாலியென்ற வாநரேச் வரரை ஏற்கெனவே நீ அறிவாயன்றோ; அவர் இராமனால் ஒரே அம்பினால் முடிக்கப் பட்டார்காண் என்றார். அன்றியும் இராவணனைச் சிறையிலடைத்துப் பலவாறு பங்கப் படுத்தியவன் கார்த்த வீரியார்ஜுனன். அன்னவனைப் பரசுராமன் தனது கோடாலிப் படையினால் ஆயிரங் கைகளையும் வெட்டிக் கொன்றவன். அப்பரசுராமன் பெருமா ளிடம் பட்டபாடு தெரிந்ததே. இத்தகைய ஒப்புயர்வற்ற ஆற்றல் பெற்ற இராகவன் இராவணனைச் சங்கரிக்கச் சிரமப்பட வேண்டுமோ ? சிரமப்பட்டதாகக் கதையிலே கண்டால், ஸத்ய ஸங்கல்பனும் மஹாவீரனுமான இராமன் எதற்காக இப்படிச் சிரமப் பட்டானென்று ஆராய வேண்டுமன்றோ. ஆராயுமளவில் அவனையும் வாழ்விக்கவே பெருமாளுக்குத் திருவுள்ளமிருந்ததென்பது புலனாகும். சூர்ப்பணகை மூக்கறுப்புண்டு ஜனஸ்தானத்திலிருந்த தன் தமையனாகிய கரனிடஞ் சென்று செய்தியறிவித்துப் புரண்டழுது அவனுக்குக் கோபத்தையுண்டாக்க, அவன் பதினாலாயிரம் ஸேனாதிபதி களையும் ஸேனைகளையும் இராமனோடு போர் புரியவனுப்ப, இராகவன் அவர்களத்தனை பேரையும் ஒருவனாகவே கொன்று பிறகு கரனையுங் கொன்று அஸஹாய சூரனென்று விருது பெற்றவன். அன்னவனை, பொல்லா வரக்கனைக் கிள்ளிக் களைந்தானென்னத் தட்டுண்டோ ? ... ... ... (13)

262. [14. உங்கள் புழைக்கடை.] *சங்கொடு சக்கரமேந்துந் தடக்கையன்.—"ஜாதோஸி தேவதேவேச ! சங்கசக்ரகதாதர !'' என்கிறபடியே கண்ணபிரான் அவதரிக்கும்போது சங்கொடு சக்கரமேந்துந் தடக்கையனாக அவதரித்தாலும், உடனே தாய் தந்தையர் "உபஸம்ஹர விச்வாத்மந்! ரூபமேதச் சதுர்ப்புஜம்'' என்று வேண்ட, திவ்யாயுதங் களை மறைத்திட்டதாக வரலாறு உள்ளது. அப்படியிருக்க ஆய்ப் பெண்கள் கண்ண பிரானைச் *சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையனாக எங்ஙனம் தெரிந்துகொண்டார் கள் ? என்று சங்கை தோன்றும். மறைத்திடும்படி வேண்டின தாய் தந்தையர் "ஜாநாது மா அவதாரம் தே கம்ஸோயம் திதிஜந்மஜ:'' என்று உகவாத கம்ஸன் தெரிந்துகொள்ள வேண்டாமென்று காரணம் கூறியிருக்கையாலே உகந்த பெண் களுக்கு மறைத்திடாமல் காட்டியருள்வனென்பர் நம் ஆசாரியர்கள். அப்படியே

காட்டியருளினதாகவும் தெரியவருகின்றது. (எங்ஙனேயென்னில்;) கண்ணபிரான் நந்த கோபர் திருமாளிகையிலே வந்து சேர்ந்தபின் யசோதைப்பிராட்டி பெண்களை யழைத்துக் கண்ணனுடைய பாதாதிகேசாந்தமான வழகைக் காட்டுவதாகப் பெரியாழ்வார் அமைத்தருளின *சீதக்கடற்பதிகத்தில் திருக்கைகளைக் காட்டும்போது "நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய கைத்தலங்கள் வந்து காணீரே" என்று திருவாழி திருச்சங்குகளினிருப்பையும் காட்டியிருப்பது காண்க. கண்ணனுடைய திருக்கைத்தலத்தில் ரேகாரூபமாக அமைந்திருக்கிற சங்கு சக்கரங்களைக் காட்டினதாகக் கொள்ளலாமேயெனின்; மேலே இரண்டாம்பத்தின் முதற்பதிகமான *மெச்சூது சங்கமிடத்தான் திருமொழியில் 'அத்தூதனப்பூச்சி காட்டுகின்ருன் அம்மனேயப்பூச்சி காட்டுகின்ருன்" என்பதற்கு சங்கு சக்கரங்களைக் காட்டுவதையே உட்பொருளாக நம் ஆசாரியர்கள் நிர்வஹிப்பதை நினைப்பது. அன்றியும் கீதையில் கண்ணபிரான் காட்டியருளின விச்வரூபத்தைக் கண்ட அர்ஜுனன் (சுலோ. 45) பயங்கரமான இந்த ரூபத்தைக் காட்டினதுபோதும்; இதை மறைத்துப் பழைய ரூபத்தையே எனக்குக் காட்டியருள வேணுமென்று பிரார்த்தித்து, (46). "கிரீடிநம் கதிநம் சக்ரஹஸ்தம் இச்சாமி த்வாம் த்ரஷ்டு மஹம் ததைவ, தேநைவ ரூபேண சதுர்ப்புஜே ஸஹஸ்ரபாஹோ1 பவ விச்வமூர்த்தே." என்கிற அடுத்த சுலோகத்தில் ஏற்கெனவே தான் கண்டுகொண்டிருந்த ரூபத்தை விவரித்திருக்கையாலே சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையனுன ரூபத்தைப் பிரதிகூலர்களுக்கு மட்டும் மறைத்து அநுகூலர்களுக்கு மறைக்காமல் காட்டிக்கொண்டிருந்தமை நன்கு விளங்கும்.

263. 15. [எல்லேயிளங்கிளியே.]—மாற்றுரை மாற்றழிக்க வல்லான்—சத்துருக்களை நிச்சேஷமாகத் தொலைக்குமியல்வினன் கண்ணபிரான். இது இராமபிரானிற்காட்டிலும் வாசி சொன்னபடி. ஸ்ரீராமன் சத்துருக்களை சேஷம் வைத்து வைத்தே அனர்த்தப்பட்டான். ஸீதாபஹாரத்திற்கு சூர்ப்பணகையும், மாரீசனுமே முக்கியமான காரணபூதர்கள். சூர்ப்பணகையை அங்க பங்கம் செய்துவிடவே "கலையிலங்கு மகலல்குலரக்கர் குலக்கொடியைக் காதொடு மூக்குடனரியக் கதறியவளோடி, தலையில் அங்கை வைத்து மலையிலங்கைபுகச் செய்த தடந்தோளன்" என்கிறபடியே அவள் இலங்கையிலே சென்று இராவணனைக் கிளப்பி அவன் மூலமாக அனர்த்தத்தை விளைவித்தாள். தாடகையை முடித்திட்டாப் போலே இவளையும் அறவே முடித்திருந்தால் மேல் அனர்த்தம் விளைய ப்ரஸக்தியிராதன்றே. அடுத்த அநர்த்த ஹேது மாரீசன். விச்வாமித்திர முனிவன் வேள்வியில் ஸுபாஹுவோடுகூட இவனையும் முடித்திட்டிருந்தால் பஞ்சவடியில் இவனுல் நலிவு விளைந்திருக்க வழியிராது. ஆக "சத்ரு சேஷம் ந சேஷயேத்" என்பதைக் கணிசியாமல் ஆங்காங்கு சத்ரு சேஷம் வைத்தபடியால் தான் இராகவன் கஷ்டமடைய நேர்ந்தது. கண்ணபிரான் படி அப்படியன்று; * தேனுகன் பிலம்பன் காளியனென்னுந் தீப்பப்பூடு களடங்க வுழக்கி* என்று பெரியாழ்வாரருளிச் செய்தபடியே சத்துருக்களை நிச்சேஷமாக நிரஸித்து *மாற்றுரை மாற்றழிக்க வல்லானுனுன்.

264. [16 நாயகனுய் நின்ற.]—மணிவண்ணனன்—நீலமணியின் நிறம் போன்ற நிறமுடையவன் என்பது மட்டும் பொருளன்று; அதன் தன்மைபோன்ற தன்மையுடையவனென்பதும் பொருள். மணியாவது ரத்னம். ரத்னத்திற்கும் எம்பெருமானுக்கும் பல படிகளாலே ஸாம்யமுண்டு; சிலவகைகள் கேளீர்.

ரத்னமானது தன்னைப் பெற்றவர்களையும் பெற விருப்பமுடையாரையும் இரவும் பகலும் கண்ணுறங்க வொட்டாது. ரத்னமென்பது மிகச்சீரியபொருளாதலால் அதனை ஆர்ஜிக்கவேண்டியகாலத்தில் அதுவே சிந்தையாகக் கண்ணுறங்காமையும், ஆர்ஜித்த பின் அதனைக் காப்பதற்காகக் கண்ணுறங்காமையும் உலகில் பிரஸித்தம். எம்பெருமான்திறத்திலு மிது காணலாம். எம்பெருமானைப் பெற நினைக்கும் முமுக்ஷுக்கள் *கண்ணுரக்கண்டு கழிவதோர் காதலுற்றுர்க்கு முண்டோ கண்கள் துஞ்சுதலே* என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடியே கண்ணுறங்கார்கள். அப்பெருமானைப்பெற்ற முக்தர்களும் நித்யர்களும் *ஸதா பச்யந்தி ஸூரய:* என்ற சுருதியின்படியும், *உறகலுறக லுறகல் ஒண்சுடராழியே சங்கே* என்கிற பெரியாழ்வார் திருமொழியின் படியும் இமையாத கண்ணினராய்க் கண் துஞ்சாமே காப்பிடுவர்கள். (2). ரத்னமானது எவ்வளவு விலையுயர்ந்ததாயினும் தலைப்பில் முடிந்து ஆளலாம்படி அடங்கியிருக்கும்.

எம்பெருமானும் எவ்வளவோ பரத்வம்பொலிய நிற்பவனுயினும் * பத்துடையடியவர்க்கு எளியவன் * என்கிற நம்மாழ்வார் திருவாக்கின்படியே ஆச்ரிதர்களுக்கு எளியனுய்ப் பரம விதேயனுயிருப்பன். * ஆயர்புத்திரனல்லன் அருந்தெய்வம் பாயசீருடைப் பண்புடைப்பாலகன் மாயனென்று மகிழ்ந்தனர் * (பெரியாழ்வார் திருமொழி) என்னும் படியான பரத்வம் விளங்காநிற்கச்செய்தேயும் உரலிலே கட்டியடிக்கலாம்படி அடங்கி யிருந்தமை முதலான ஸௌலப்ய காரியங்கள் பலவும் நினைக்கத்தக்கன. (3). ரத்னமானது கடல் மலை முதலிய இடங்களில் உள்ளது. கடல் ரத்நாகரமென்றே பெயர்பெற்றதாதலால் கடலில் ரத்னமிருப்பது ஸித்தம். * ஊரும்வரியரவமொண் குறவர் மால் யானை பேரவெறிந்த பெருமணியை * (முதல் திருவந்தாதி) என்பது முதலான பாசுரங்களினுல் மலையில் ரத்னமிருப்பதும் ஸித்தம். எம்பெருமானும் திருப்பாற்கடலிலும் திருவேங்கடம் திருமாலிருஞ்சோலை முதலான மலைகளிலும் விளங்குவன். * மலைமேல் நிற்பாய் கடல் சேர்ப்பாய் * என்ற திருவாய்மொழியும் இங்கே நினைக்கத்தக்கது. (4). ரத்னமானது தன்னையுடையவனை மார்பு நெறிக்கப் பண்ணும். ரத்னமுடையவர்கள் மஹாதனிகர்களாதலால் செருக்குற்றிருப்பர்களன்றே. எம்பெருமானும் தன்னை யுடையவர்களை * எனக்காரும் நிகரில்லையே * மாறுளதோ இம்மண்ணினின்மிசையே * * எனக்கென்னினி வேண்டுவதே * * இனி யாவர் நிகரகல்வானத்தே * என்று மார்பு நெறித்துப் பேசப்பண்ணுவன். நாலுநாளில் அழிந்துபோகக்கூடிய ரத்னத்தைப் பெற்றவர்கள் மார்பு நெறிக்கக் கண்டால் என்றுமழியாத சாச்வத ரத்னத்தைப் பெற்றவர்கள் மார்பு நெறிக்கச் சொல்லவேணுமோ! (5). ரத்னமானது தன்னைக் கைக் கொண்டவனைப் பலரும் அநுவர்த்திக்கும்படி பண்ணும். மஹா தனிகர்களைப் பலரும் அநுவர்த்தித்துக் கிடப்பர்களன்றே. எம்பெருமானும் தன்னையுடையார்களை உலக மெல்லாம் அநுவர்த்திக்கும்படி பண்ணுவன். * மைத்ரேய: பரிபப்ரச்ச ப்ரணிபத்யாபி வாத்ய ச * * தத் வித்தி ப்ரணிபாதேந பரி ப்ரச்நேந ஸேவயா, உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ் தத்வதர்சிந:* இத்யாதிகள் காண்க. பகவானைக் கைக்கொண்ட மஹான்களை உலகமெல்லாம் அநுவர்த்திக்கக் காணுகின்றோமே.

6. ரத்னமானது இடையில் ஒரு புருஷனைக்கொண்டே வாங்கப்படும் [தரகரிகள் என்று சிலருண்டே; அவர்கள் மூலமாகவே பெரும்பாலும் ரத்ன வியாபாரம் நடைபெறும்.] எம்பெருமானும் புருஷகாரமுகமாகவே பெறப்படுவன். * வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணோர்பெருமான் திருப்பாதம்பணிந்து * என்றார் நம்மாழ்வார். ஸ்ரீ ராம ரத்னத்தைப் பெறவந்த விபீஷணுழ்வான் * நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம் * என்று புருஷகார புரஸ்காரங்கொண்டமை அறியத்தக்கது. (7). ரத்னமானது சிலசில ஆச்ரயங்களில் அதிகமான மதிப்புப்பெறும். எம்பெருமானும் ஆழ்வார்களின் திருவாக்கில் புகுந்து புறப்பட்ட திருப்பதிகளிலே அதிகமான மதிப்புப் பெறுவன். * வேடார் திருவேங்கடம் மேய விளக்கே. * (8). ரத்னமானது ஒளியைவிட்டிராது; எப்போதும் ஒளியோடுகூடியே யிருக்கும். எம்பெருமானும் பிராட்டியைவிட்டு இரான். * தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ * *அநுஜநுரநுரூபரூப சேஷ்டா...இந்திரா * இத்யாதி ப்ரமாணங்களின்படியே பிராட்டியோடுகூடியே யிருப்பனெம்பெருமான். * அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா * என்கிற ஸீதாபிராட்டியின் வசனத்தாலும், * * அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா * என்கிற ஸ்ரீ ராகவன் வசனத்தாலும் பிராட்டியை ஒளியின் ஸ்தானத்திலே உணரலாம். ரத்னத்திலே ஒளியானது சிலஸமயங்களிலே உத்பூதமாயிருக்கும், சில ஸமயங்களிலே அநுத்பூதமாயிருக்கும். அப்படியே பிராட்டி எம்பெருமானிடத்திலே சிலஸமயங்களில் ஸ்பஷ்டமாய்த்தோன்றியிருப்பள்; வாமநாவதாராதி ஸமயவிசேஷங்களில் மறைந்திருப்பள். *க்ருஷ்ணாஜிநேந ஸம்வ்ருண்வந் வாமநோ வக்ஷஸி ச்ரியம் என்றார்கள் மஹர்ஷிகள். வேதாந்த வாசிரியர் தேஹளீசஸ்துதியில் *பிக்ஷோசிதம் ப்ரகடயந் ப்ரதமாச்ரமத்வம் க்ருஷ்ணாஜிநம் யவநிகாம் க்ருதவாந்ப்ரியாயா:, வ்யக்தாக்ருதேஸ் தவ ஸமீக்ஷ்ய புஜாந்தரே தாம் த்வாமேவ கோபநகரீச! ஜநா விதுஸ் த்வாம்* என்றருளிச் செய்த ச்லோகரத்நமும் இங்கே அநுஸந்தேயம். (9) ரத்னமானது ஒளியால் மேன்மைபெறும், ஒளிமிக்க ரத்னத்திற்கே யன்றோ மதிப்பு அதிகம். எம்பெருமானும் பிராட்டியினுலேயே பெருமேன்மை பெறுகின்றான். * திருவில்லாத்தேவரைத் தேறேல்மின் தேவு* என்கிறார் திருமழிசைப்பிரான். *வேதாந்தாஸ் தத்வ சிந்தாம் முரபிதுரஸி யத்பாதசிஹ்நைஸ் தரந்தி* என்றும் *அபாங்கா பூயாம்ஸோ யதுபரி பரம்

ப்ரஹ்ம ததபூத்* என்றும் அருளிச்செய்கிருர் பட்டர் ஸ்ரீகுணரத்ந கோசத்திலே. *அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா* என்கிற மாரீச வசனமும் ஸ்ரீராமபிரானுக்குப் பிராட்டியினுலேயே பெருமேன்மையென்று நன்கு விளக்குகின்றது. இராவணன் மாரீசனிடம் வந்து 'இராமனை அடர்க்க நீ துணைநிற்கவேணும்' என்று வேண்ட, அப்போது மாரீசன் சொன்ன அற்புதமானமொழி இது. இராமன் ஸீதா பிராட்டியைக் கைப்பிடிப்பதற்கு முன்னம் விச்வாமித்திரனது வேள்வியிலே என்னுல் காணப்பட்டான்; அப்போதே அவன் அநபிபவ நீயனுயிருந்தான்; பின்னை அவன்-ஸீதா பிராட்டியைக் கைப்பிடித்தவனுமாயினன்; அதனுல் அப்பெருமானுக்கு விளைந்த புகர் பேசத்தரமோ? என்ருன். *ஸ்வயா தீப்த்யா ரத்நம் பவதபி மஹார்க்கம்* என்கிற ஸ்ரீகுணரத்ந கோச ஸ்ரீஸூக்தியும் இங்கே சேர்த்து அநுஸந்தேயம். 10. ரத்னமானது தன்னை யிழந்தவனைக் கதறிக்கதறி அழப்பண்ணும்; உயர்ந்த ரத்னத்தை இழந்தவன் கதறிக்கதறி யழுவது தவிர வேறென்ன செய்யமுடியும்? எம்பெருமான் படியுமிப்படியே. ஸ்ரீராமரத்நத்தை யிழந்த பரதாழ்வான் ஸபையிற் புரண்டு கதறியழுதமை *விலலாப ஸபா மத்யே* இத்யாதிகளில் ப்ரஸித்தம் *ஏரார்ந்தகருநெடுமால் இராமனுய் வனம்புக்க வதனுக்காற்ருத் தாரார்ந்த தடவரைத்தோள் தயரதன்தான் புலம்பிய வப்புலம்பலும் ஸ்ரீராமாயணுதி ப்ரஸித்தம். *பழுதே பலபகலும் போயினவென்று அஞ்சியழுதேனென் கிருர்கள் அறிவிற்சிறந்தவர்கள். *எழில்கொள் நின் திருக்கண்ணிணை நோக்கந் தன்னையுமிழந்தேனிழந்தேனே* இன்பத்தையிழந்த பாவியேனெனதாவி நில்லாதே* என்று தெய்வத் தேவகி புலம்பிய புலம்பலும் ப்ரஸித்தம். *உன்னைக் காண்பான் நானலப்பாய் ஆகாயத்தை நோக்கியழுவன்" என்று கதறுகிருர் நம்மாழ்வார். *ஏகஸ்மிந்நப்யதிக்ராந்தே முஹூர்த்தே த்யாநவர்ஜிதே, தஸ்யுபிர் முஷிதேநேவ யுக்தம் ஆக்ரந்திதும் ந்ருணும்* என்று எம்பெருமானுடைய சிந்தனையை ஒரு நொடிப்பொழுது இழந்தாலும் கதறிக்கதறி யழவேணுமென்கிருர்கள் மஹர்ஷிகள். ஆகவே இழவில் கதறியழப்பண்ணுந் தன்மை ஒக்கும்.

11. ரத்னமானது அதமன் கையிலே கிடைத்தவளவில் அற்ப விலைக்கு மாறும்? மத்யமன் கையில் கிடைத்தவளவில் உள்ளபடியான விலைக்கு மாறும்; உத்தமன் கையில் கிடைத்தவளவில் விலைக்கு ஆட்படாமல் ஸ்வயம்போக்யமாகும். (இதன் விவரணம்;) மீன் பிடிக்கிற செம்படவன் கையிலும் விலையுயர்ந்த ரத்னம் கிடைப்பதுண்டு; அவன் அதன் மதிப்பை யறியாதவனுகையாலே அற்பவிலைக்கு அதை விற்றுவிடுவன். *"மாமதியம்திளைக்குங்கொடி மாளிகைசூழ்தெருவில் செழுமுத்து வெண்ணெற்கெனச் சென்று முன்றில் வளைக்கை நுளைப்பாவையர்மாறு நாங்கூர்" என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தாலும் இது அறிய வெளிது. அதே ரத்னம் ஒரு வியாபாரியின் கையில் கிடைத்தால் அவன் அதன் மதிப்பை யறிந்தவனுகையாலே உள்ளபடியான விலைக்கே விற்பன். அதே ரத்னம் ஒரு மஹாராஜன் கையில் கிடைத்தால் அவனுக்கு அதை விற்று ஆகவேண்டிய தொன்றுமில்லாமையாலே விலைகோராமல் அதை ஹாரத்திலேயழுத்தி ஸ்வயம் போக்யமாக அணிந்துகொள்ளுவன். எம்பெருமான்படியு மிப்படியே. க்ஷுத்ரர்கள் எம்பெருமான் பக்கலிலே ஐச்வர்யம் ஸந்தானம் என்றிங்ஙனே அற்ப பலன்களைப் பெற்றுப்போவர்கள். சிலர் மோக்ஷத்தை வேண்டிப் பெற்றுப்போவர்கள். அவன் பக்கலில் நாம் வேண்டுவதொன்றுண்டோவென்று அற்பபலன்களையும் விரும்பாமல் உயர்ந்த பலனுன மோக்ஷத்தையும் விரும்பாமல் *இச்சுவை தவிர யான்போய் இந்திரலோகமாளுமச்சுவை பெறினும் வேண்டேன்* என்றும் *எம்மா வீட்டுத்திறமும் செப்பம் * என்றும் *வைகுண்டவாஸேபி ந மேபிலாஷ:* என்றும் பரமபதத்தையும் வெறுத்துத்தள்ளி * எனக்குத் தேனேபாலே கன்னலேயமுதே * என்று ஸ்வயம் போக்யமாக அநுபவித்து அத்தலைக்கு மங்களாசாஸனம் செய்வது தவிர வேறொரு பேறில்லையென்று அதுவே போதுபோக்கா யிருப்பர்கள் உத்தமாதிகாரிகள். * த்வயி ஏகஸ்மிந்நபி விஜஹதோ முக்தவத் ஸாதநத்வம் * என்று தேசிகன் பணித்த கணக்கிலே எம்பெருமானிடத்திலுங்கூட உபாயத்வபுத்தியைப் பண்ணுதே உபேயத்வ புத்தியையே பண்ணியிருக்கும் ஸத்ஸம்ப்ரதாய ரஸிகர்கள் மஹா ராஜஸ்தாநே மதிக்கப் படுவர்கள். அநுபாயங்களானவற்றிலுங்கூட உபாயத்வபுத்தியைப் பண்ணி நிற்கு மவர்கள் வியாபாரிகளின் ஸ்தானத்திலே எண்ணப்படுவர்கள். க்ஷுத்ரபலார்த்திகள் செம்படவன் போல்வாரான நீசர்களின் ஸ்தானத்திலே நினைக்கப்படுவர்கள். மேலே

விவரித்த மூன்று படிகளுக்கும் ரத்னம் இணங்கியிருப்பதுபோல எம்பெருமானும் இணங்கி யிருத்தல் நன்கு உணரத்தக்கது. (12) ரத்னமானது சேற்றிலே கிடந்தால் மதிப்பறியாதவர்களாலே நிஹீநமாகக் கருதப்பட்டு, மதிப்பறியுமவர்களாலே உள்ள படியே கருதப்படும். எம்பெருமான்படியுமிப்படியே. *மாய வன்சேற்றள்ளல் பொய்ந் நிலத்தே* என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடியே சேற்று நிலமாகிய இவ்விருள் தருமா ஞாலத்திலே எம்பெருமான் வந்து சேர்ந்தால் "அவஜா நந்திமாம் மூடா:" என்கிறபடியே பெருமையறியாதவர்களாலே இகழப்படுவன். பெருமையுணர்ந்த பெரியவர்களாலே "பவாந் நாராயணோதேவ:" என்று மதிக்கப்படுவன் இங்ஙனே மற்றும் பல காண்க.

*265.* (17. அம்பரமே —உலகளந்த உம்பர் கோமான்.)—மஹாபலி இமயமலையருகிற் சென்று கடுந் தவம் புரிந்து நான்முகக் கடவுளினருள்பெற்று த்ரிலோக ஸாம்ராஜ் யத்தை வரம் வேண்டிப் பெற்றுத் தன்னிருப்பிடம் சேர்ந்து ஸ்வர்க்கலோகத்தையும் வென்று ஆளவேண்டுமெனக் கருதி சுக்கிராசாரியரைத் தேவலோகத்திற்கனுப்பி ஒரு மாத அவதியில் இந்திரலோகத்தைத் தன்னதீனமாக்கும்படி ப்ருஹஸ்பதிக்கு அறிவிப் பிக்க, இதனையறிந்த இந்திரன் ஒன்றுந் தோன்றாமல் ப்ருஹஸ்பதியையுங் கூட்டிக் கொண்டு பிரமனிடஞ் சென்று செய்தி சொல்ல, அது கேட்ட நான்முகன் 'வரங் கொடுப்பதற்கு மட்டுமே எனக்கு அதிகாரமுள்ளது; கொடுத்த வரத்தினால் கெடுதி நேர்ந்தால் வேறோருபாயத்தினால் அதை மாற்ற எனக்கு வல்லமையில்லை, என்ன, பிறகு சிவபிரானிடஞ் சென்று முறையிட, அவனும் 'பிரமன் தந்த வரத்தை நான் அழிக்கவல்லேனல்லேன்; விஷ்ணுவிடஞ் சென்று முறையிடுதல் நன்று' என்று சொல்லி விட, அவர்கள் விஷ்ணுபக்கல்வந்து சொல்லிக்கொள்ள, அதற்கு விஷ்ணு 'மஹாபலி எனக்குச் சிறந்த பக்தன், மிக்க தரும சிந்தையுள்ளவன்; திடீரென்று அவனை நான் ஒன்றுஞ் செய்யலாகாது; தக்க உபாயத்தை நீங்களே ஆராய்ந்து சிறிதுகாலம் கழியுங் கள்' என்று சொல்லிவிட்டு மறைந்தார். மஹாபலி முன்பு தெரிவித்திருந்தபடி தன் படைகளுடன் ஜயபேரி முழங்கப் புறப்பட்டு இந்திரனோடு போர் புரிவதென்று சுவர்க்க லோகஞ் சென்று அங்கு ஒருவரையுங் காணாமல் அங்குள்ள சிங்காசனத்தின்மீது தான் ஏறி வீற்றிருந்து இந்திரனைப்போல் மூவுலகங்களையும் ஆண்டுவந்தான். அப்போது ப்ருஹஸபதி அந்த மஹாபலிக்குப் புரோஹிதனாயிருக்க இசையாமல் புறப்பட்டுவந்து கச்யபருடைய ஆச்ரமத்தில் அவருடைய தருமபத்தினியான அதிதிதேவியிடத்தில் இந்திரனுடைய துக்கச் செய்திகளையுரைக்க, அவள் கேட்டு மனம் பொறாமல் அழுது கொண்டு தன் புத்திரனாகிய இந்திரனுக்கு நன்மைகள் உண்டாகும்படி விஷ்ணுவிடம் பிரார்த்திக்க விரும்பி பகவானைத் துதித்துக்கொண்டிருக்கையில் ப்ரஸந்நரான ஸ்ரீமஹா விஷ்ணு அதிதிதேவியின் முன்னேவந்து ஸேவை ஸாதித்து அவள் கோரிக்கையைத் தெரிந்துகொண்டு 'அம்மா! நான் உனக்குப் பிள்ளையாகப் பிறந்து இந்திரனுடைய துயரத்தைப் போக்குகிறேன்' என்று சோதிவாய் திறந்து அருளிச்செய்து மறைந்திட, பிறகு சிறிது காலங்கழிந்தபின் அதிதி கர்ப்பம் தரித்து வாமனனைப் பெற்றனள். கச்யபர் அப்புதல்வனுக்கு ப்ராஹ்மண ஸம்ஸ்காரங்களையெல்லாம் கிரமமாகச் செய் வித்தார். வாமனனும் தபஸ்வியாக இருந்துவந்தான். அக்காலத்தில் மஹாபலி நர்மதா நதியின் கரையில் வைஷ்ணவயாகஞ் செய்ய முயன்று யாகத்தை நடத்திக்கொண் டிருக்கையில் வாமனன் இந்திரனுக்கு நாம் உதவிசெய்ய இதுவே தக்க சமயமென் றெண்ணி அவனைத் தன்னிடம் வரவழைத்து 'இந்திரா! இப்போது மஹாபலி மஹத் தான யாகஞ் செய்கின்றான்; பெருவள்ளலென்று பேர் பெற்றுப் பொன்னாகவே வர்ஷிக் கிறான்; அவனிடம் நீ சென்று 'மாவலீ! எனக்குப் புதிதாகவொன்றும் நீ தானம் செய்ய வேண்டா; என்னுட்டை எனக்குக் கொடுத்தாயாகில் போதும் என்று சொல்லு; உடனே உனக்கு எளிதாக உன்னுடை கிடைத்துவிடும்' என்று ஸதுபாயம் கூற, 'அவனிடம் போய் நான் யாசிக்கமாட்டேன்' என்று இந்திரன் மறுத்துக்கூற, அவன் நிஹீனமாக நினைத்த யாசகவ்ருத்தியை ஸ்ரீமஹாவிஷ்ணு தான் உகந்து ஏற்று மாவலியிடஞ் சென்று மூவடி வேண்டிப் பெற்று, அதனை அளந்துகொள்ளும் வியாஜத்தினாலே ஓங்கி உலகளந்து மாவலியைவலியடக்கிப் பாதாளத்திலேதள்ளி இந்திரனை வாழ்வித்தான்.

*266.* [18. உந்துமத களிற்றன்.]—பந்தார் விரலி மைத்துனன்—இப்பாசுரம் பூர்த்தி யாக நப்பின்னைப் பிராட்டியை மட்டும் திருப்பள்ளியுணர்த்துமதாதலால் இதில் எம் பெருமானுக்கு ஒரு திருநாமமும் இடப்படவில்லை. ஆயினும் "பந்தார் விரலி! உன் மைத்

துனன் பேர்பாட'' என்றதைக்கொண்டு ''பந்தார் விரலி மைத்துனன்'' என்று பகவந் நாமமாக்கிச் சிறிது அநுபவிக்கிறோம். பொதுவாக மாதர்களை ப்ரஸ்தாவிக்குமிடங் களில், அவர்களுக்குப் பந்து விளையாட்டு ஒரு போதுபோக்காதலால் அதை நிருபக மாக இட்டு ப்ரஸ்தாவிப்பது தமிழ்நூல் வழக்கு. திவ்யப்ரபந்தங்களில் பொதுவாக ஸ்த்ரீகளைப் பற்றிப் பேசுமிடங்களிலும், ஸ்ரீ மஹாலக்ஷ்மி, ஸீதாபிராட்டி, த்ரௌபதி, நப்பின்னை முதலிய விசேஷ வ்யக்திகளைப்பற்றிப் பேசுமிடங்களிலும் பந்து விளை யாட்டையிட்டுப் பேசப்பட்டுள்ளது திருநாங்கூர்ப்பதிகமொன்றில் ''இளைய மங்கை யரிணையடிச்சிலம்பினோடு எழில்கொள் பந்தடிப்போர் கைவளையில் நின்று ஒலி மல்கிய நாங்கூர் வண்புருடோத்தமமே'' என்றுள்ள பாசுரம் பொதுவாக மாதர்களின் பந்து விளையாட்டைப் பேசுவது. திருவெவ்வுளூர்ப் பதிகத்தில் ''பந்திருக்கும் மெல் விரலாள் பாவை பனிமலராள், வந்திருக்கும் மார்வன்'' என்ற பாசுரமும், ''பந்தணைந்த மெல் விரலாள் பாவை தன் காரணத்தால் வெந்திறலேறேழும் வென்ற வேந்தன்'' என்ற பாசுரமும் முறையே ஸ்ரீ மஹாலக்ஷ்மியினுடையவும் நப்பின்னைப் பிராட்டியினுடையவும் பந்து விளையாடலைப் பேசுகின்றன. திருநறையூர்ப் பதிகமொன்றில் ''பந்தார் விரலாள் பாஞ்சாலி கூந்தல் முடிக்க'' என்ற பாசுரம் த்ரௌபதியின் பந்து விளையாட்டைத் தெரி விப்பது தேரழுந்தூர்ப் பதிகமொன்றில் ''பந்தணைந்த மெல் விரலாள் சீதைக்காகி'' என்ற பாசுரம் ஸீதா பிராட்டியின் பந்து விளையாட்டைக் கூறுவது பெண் பாவனை யெய்திய நம்மாழ்வாராகிற ஸ்ரீ பராங்குச நாயகி, திருமங்கையாழ்வாராகிற ஸ்ரீ பரகால நாயகி ஆகிய இவர்களுக்கும் பந்துவிளையாடலுண்டென்பது ''என்னுடைய பந்துங் கழலும் தந்து போகு நம்பீ'' ''பூவை பைங்கிளிகள் பந்து தூதை பூம்புட்டில்கள்'' ''பந்தோடு கழல் மருவாள் பைங்கிளியும் பாலூட்டாள் பாவைபேணாள்'' என்றிவை முதலான பாசுரங்களினால் உய்த்துணரப்படும். *பந்தார் விரலியென்னுமிவ்விடத்தில் நப்பின்னைப் பிராட்டியின் பந்து விளையாட்டு கண்ணபிரானோடு நடைபெறுவதாகத் தெரிவிக்கப்படுகிறது. இங்கு மைத்துனன் என்றது சாதிப் பேச்சு. பொதுவாக உறவை யுணர்த்தும் ''மைத்துனன்மார் காதலியை மயிர் முடிப்பித்து'' என்றும், ''மைத்துனன் மார்களை வாழ்வித்து மாற்றலர் நூற்றுவரைக் கெடுத்தாய்'' என்றுமுள்ள பெரியாழ் வார் பாசுரங்களில் பாண்டவர்கள் கண்ணபிரானுக்கு மைத்துனர்களாகச் சொல்லப்பட் டார்கள். ஆகவே பொதுவாக உறவைத் தெரிவிக்குஞ்சொல் மைத்துனனென்பது. இங்குக் கணவனென்னுமுறவு கொள்ளப்படவேண்டும். ஆக, பின்னை மணாளனென்ற தாயிற்று.

267. (19. குத்து விளக்கெரிய.)—நப்பின்னை கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர் மார்பன்—இதுவும், பின்னை தோள் மணந்த பேராயனென்றபடி. திருப்பாவைக்குத் தனியனிட்டருளின பட்டர் அதற்கு இந்தப் பாசுரத்தையே உயிராக வைத்தருளினர். ''நீளாதுங்க ஸ்தநகிரிதடீஸுப்த முத்போத்ய க்ருஷ்ணம்'' என்றது நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பனை யுணர்த்தியென்றபடி. தமிழில் பின்னை யென்றும் நப்பின்னையென்றும் ப்ரஸித்திபெற்ற இத்தேவிக்கு வடமொழியில் நீளா என்று திருநாமம் சாற்றினவர் முதல் முதலாகக் கூரத்தாழ்வான். பிறகு பட்டர்; பிறகு வேதாந்தவாசிரியர். கூரத்தாழ்வான் ஸுந்தரபாஹுஸ்தவத்தில் தசாவதார ஸ்துதியடைவில் க்ருஷ்ணவதார ப்ரஸ்தாவத்தில் ''ஹேஸுந்தரைகதரஜந்மநி க்ருஷ்ண பாவே'' என்னும் சுலோகத்தில் 'நீளா குலேந ஸத்ருசீ கில ருக்மிணீ ச.' என்றது காண்க. பட்டருடையது நீளாதுங்கஸ்தநகிரிதடீத்யாதி ஸுப்ரஸித்தம் வேதாந்த வாசிரியர் யாதவாப்யுதயம்—நான்காவது ஸர்க்கத்தில் (98.) நப்பின்னைப் பிராட்டியை மணம் புணர்ந்த சரிதையைச் சொல்லுமிடத்து ''திசாகஜாநாமிவ சாக்வராணும்—— கண்டாந் நிபீட்யலேபே பணிதேந நீளாம்'' என்று கூறியிருப்பது காண்க. யாதவாப்யு தயத்திற்கு வியாக்கியானமிட்டவர் அப்பய தீக்ஷிதராகையாலே அவர் இந்த சுலோகத் தின் வியாக்கியானத்தில் வடமொழியில் எழுதியிருப்பதாவது,

''ஹரிவம்சத்தில் இவ்வண்ணமாகக் கதை காண்கிறது; விதேஹ நகரத்தில் யசோதையின் உடன்பிறந்தவனுன கும்பகனென்னும் கோபாலனிருந்தான். கால நேமியென்னுமஸுரனுடைய மக்கள் எழுவர் முன்பு பகவானால் வென்றொழிக்கப் பட்டவர்கள் பழைய பகையை நினைத்து ஸ்ரீக்ருஷ்ணனுக்குத் தீங்கு விளைக்க வெண்ணி அந்த கும்பகருடைய சேரியில் ஏழு காளைகளாக இருந்து வந்தனர்.

அக்காளைகள் கோகுலத்தில் பலவகைத் தீமைகளையும் செய்துகொண்டிருந்தன. அவற்றை வலியடக்கு மாற்றல் அந்த கும்பகர்க்கு இல்லாதிருந்ததனால், இவற்றை வலியடக்க வல்லவர்க்குத் தன் மகளை மணம் செய்வித்துக் கொடுப்பதாகப் பறை சாற்றியிருந்தாரவர். அவ்விடத்திலே ஒருஸமயம் ஸ்ரீக்ருஷ்ண பகவானெழுந்தருளி அவ்வெருதுகளை முடித்து நீளையை மணந்துகொண்டனன்''

என்று. ஹரிவம்சத்தில் இங்ஙனே கதையிருப்பதாக தீக்ஷிதர் எழுதியுள்ளார். ஆனால் இப்போதைய ஹரிவம்சப்பதிப்புகளில் இக்கதை நமக்குக் கிடைக்கவில்லை; இதிஹாஸ புராணாதிகளில் ப்ரக்ஷேப—உத்க்ஷேபங்கள் பலவுளவாதலால் (ப்ரக்ஷேபம்—புதிதாகச் சேர்ப்பது; உத்க்ஷேபம்—இருப்பதையெடுத்துவிடுவது) இது உத்க்ஷேபத்தில் சேர்ந் திருக்கும்போலும். எருதேழடர்த்து மணம் புணர்ந்த இந்தச் சரித்திரம் இதிஹாஸ புராண ஸித்தமென்பதில் ஐயமில்லை. புராணத்தில் இவளுடைய பெயர் நீலா என்றே குறிப்பிடப்பட்டிருக்கிறதாவென்பது நன்கு ஆராய்ந்து பார்த்து நிர்ணயிக்கப் பட வேண்டிய விஷயம். நம் ஆசாரியர்கள் சிந்தயந்தியென்று வியபதேசிக்கு மோர் ஆய்ப்பெண்ணை புராணரத்னத்தில் ஸ்ரீபராசரர் காசித் என்று சொல்லி யிருப்பது போல, இவளும் புராணத்தில் காசித்—காசந என்று சொல்லப்பட்டிருக்கவுங் கூடும். கூரத்தாழ்வான் முதலான ஆசாரியர்கள் நீளா என்கிற வடமொழி நாமத்தை யிட்டு இவளை வ்யபதேசிப்பதற்கு மூலம் ஆழ்வார்களின் திவ்ய ஸூக்திகளேயாகும். கேண்மின். எம்பெருமான் திருநாட்டில் ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவியென்று தேவிமார் மூவரோடு கூடியிருப்பதாக பகவச் சாஸ்த்ரங்களினால் தெரிய வருகின்றது. ஸ்ரீராமா யணத்தில் ஸமுத்ர சரணாகதி ப்ரகரணத்திலுள்ளதான "புஜை: பரமநாரீணாம் அபிம் ருஷ்டம் அநேகதா'' என்ற சுலோகத்தின் வியாக்கியானத்திலும் இது காணலாகிறது. ஆழ்வார்களருளிச் செயல்களில் "உடனமர் காதல் மகளிர் திருமகள் மண்மகள் ஆயர் மடமகள் என்றிவர் மூவர்'' என்றும், "கூந்தல் மலர் மங்கைக்கும் மண்மடந்தைக்கும் குலவாயர் கொழுந்துக்கும் கேள்வன் தன்னை'' என்றும் இங்ஙனே வரும் பசுரங்கள் பல. இவற்றில் ஸ்ரீதேவியைத் திருமகளென்றும் மலர் மங்கையென்றும், பூதேவியை மண் மடந்தையென்றும் மண்மகளென்றும் ஸாதித்து, உடனே நீளா தேவியைச் சொல்ல வேண்டுமிடத்து ஆயர் மடமகளென்றும் குலவாயர் கொழுந்தென்றும் சொல்லியிருப்பதனால் ஸ்ரீ பூதேவீ ஸஹபடிதையான நீளாதேவியே விவக்ஷிக்கப்பட்டாளென்பது திண்ண மாகத் தேறுதலால் இதை யவலம்பித்தே ஆசாரியர்கள் நப்பின்னையை நீளா என்று வியபதேசித்தனரென்று அறுதியிடக் குறையில்லை. பின்னையென்னும் தமிழ்ச் சொல் லுக்கு ஸ்ரீ பூதேவிகளுக்குப் பிறப்பட்டவளென்று பொருள். நப்பின்னை யென்னும்போது 'ந' உயர்வு குறிக்கும் தமிழுப சர்க்கம். (நக்கீரர் என்றதிற் போல.)

**268.** [20. முப்பத்து மூவர்]—செற்றார்க்கு வெப்பங்கொடுக்கும் விமலன்—செற்று ரென்று சத்துருக்களுக்குப் பெயர்; அவர்களுக்கு வெப்பங் கொடுப்பவன்-பீதிஜ்வரத்தை யுண்டாக்குபவன்; அவர்களை முடிப்பவனென்பது முடிந்த கருத்து. *ஸமோஹம் ஸர்வ பூதேஷு* என்றும், ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்* என்றும் *தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யம் அதிதைவதம்* என்றுமுள்ள பிரமாணங்களின்படியே ஸர்வபூதஸுஹ்ருத் தான எம்பெருமானுக்கு சத்துருக்களிருக்க ப்ரஸக்தி கிடையாது *பாண்டவாந் த்விஷ ஸே ராஜந்! மமப்ராணாஹி பாண்டவா:* என்று பாண்டவ தூதனான தான் பணித்தபடி பாகவத விரோதிகளையே தனது விரோதிகளாக நினைத்து அவர்களை நிரஸிப்பவன் பகவான். ஆயினும் ஸர்வபூத தயாளுவான அவன்தனக்கு அது அவத்யமாகாதோ வென்று சிலர் சங்கிக்கக் கூடுமென்று நினைத்த ஆண்டாள் விமலா! என்று கூறிப் பரிஹரித்தாளாயிற்று. விளக்கிலே விட்டில்கள் விழுந்து மடியுமா போலேயும் குளத் திலே கழுத்தில் கல்லைக்கட்டிக்கொண்டு விழுந்து சிலர் மாண்டு போவது போலவும் "வல்லரக்கர் புக்கழுந்தத் தயரதன் பெற்ற மரகதமணித்தடம்'' என்று நம்மாழ்வார் பணித்தபடி விரோதிகள் தாமாக வந்து விழுந்து மடிந்து போனால் அது எம்பெருமா னுடைய அவத்யமன்று என்று விமலா வென்பதனால் காட்டினபடி

**269.** (21. ஏற்ற கலங்கள்)—படைத்தான் மகன்—இங்குப் பெரும் பசுக்கள் படைத்தான் மகன் என்றுள்ளது. படைத்தானென்னப்பட்டவன் யாவனென்னில்; ஏற்ற கலங்களெதிர்பொங்கி மீதளிப்ப மாற்றாதேபால் சொரியும் வள்ளல் பெரும் பசுக் களாற்றப் படைத்தானென்றிருப்பதனால் அன்னவன் நந்தகோபனென்று கொண்டு

நந்தகோபன் மகனென்றதாகிறது. எம்பெருமான் விபவாவதாரத்தில் நந்தகோபன் மகனுகி, அர்ச்சாவதாரத்திலே யதிராஜ ஸம்பத் குமாரனுனமையால் பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னுனான ஆண்டாள் அப்பொருளையும் திருவுள்ளம் பற்றியிருப்ப தாகக் கொள்ளத் தட்டில்லை. சொற்போக்கை ஊன்றிப் பார்க்கில் அப்பொருளே முக்கியமாக விவக்ஷிதமென்றுங் கொள்ளலாம். சுரந்த பாலை ஏற்றுக்கொள்வதற்காக ஏந்தப்பட்ட கலங்களானவை ஒரு க்ஷணத்தில் நிறைந்து எதிரே பொங்கி மேலே வழியும்படியாக இடையறாது பாலைச் சுரக்கின்ற வள்ளல் பெரும் பசுக்களை விசேஷமாகப் படைத்துள்ள நந்தகோபனுடைய குமாரனே! என்பது யாவருமறிந்தபொருள். உட்பொருள் (அல்லது) நுட்பொருள் கேண்மின். கலம் என்று பாத்திரம். ஏற்ற கலம் என்று ஸத்பாத்ர பூத ஸச்சிஷ்யர்களைச் சொல்லுகிறது. ஏற்ற என்பதற்கு ஏந்தப்பட்ட என்னும் பொருள்போல ஏற்றிருக்கின்ற (தகுதியாயிருக்கின்ற) என்னும் பொருளும் பாங்கேயாதலால் ''உனக்கேற்கும் கோலமலர்ப்பாவை'' என்னுமாபோலே ஆசாரியனுக்கு ஏற்ற ஸச்சிஷ்யர்களைச் சொன்னபடி. அவர்கள் எதிர்பொங்கி மீதளிக்கை யாவது ''சிஷ்யாதிச்சேத் பராஜயம்'' என்றது ஸார்த்தகமாய் 'இவர்கள் ஆசாரியனிலும் மேம்பட்டவர்கள்' என்று நாடு புகழும்படியாக மிகச் சிறந்த யோக்யதைபெற்று ஆசார்யனுக்கும் அர்த்தவிசேஷங்களை யுணர்த்தவல்லவராம்படியிருக்கை. அப்படிப் பட்ட ஸச்சிஷ்யர்கள் (கூரத்தாழ்வான் போல்வார்) மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும் பசுக்களாகக் கொள்ளத்தகுவர்; பால்போன்ற மஹார்த்தங்களை நிரந்தரமாக வர்ஷித்து வள்ளலெனப் புகழப்படுவார்கள்; அன்னவர்களை ஆற்றப்படைத்தான்— ''ஏகாந்திநாம் த்வாதசபிஸ் ஸஹஸ்ரை: ஸம்ஸேவிதஸ் ஸம்யமி ஸப்தசத்யா'' என்று வடுகநம்பி பணித்தபடியே அபரிமிதமாகப் படைத்தவர் ஸ்வாமி யெம்பெருமானுர். அவருடைய மகன்—செல்வப்பிள்ளையென்றும் ஸம்பத்குமாரனென்றும் ப்ரஸித்தி பெற்ற பெருமான்.

270. (22. அங்கண்மா ஞாலத்து)—இப்பாட்டில் எம்பெருமானுடைய திருநாமம் ஏதும் அநுஸந்திக்கப்பட்டிருக்கவில்லை. ஆயினும் பாட்டிலுள்ள சொல் தொடையை நோக்கி ''அங்கண்மா ஞாலத்தரசர் பணியும் பெருமான்'' என்று ஒரு திருநாமமமைத்துக் கொண்டு அவனையநுபவிப்போம். எம்பெருமானுடைய விபவாவதாரத்திலும் அர்ச்சாவதாரத்திலும் பல பல அரசர்கள் அஹங்காரம் ஒழிந்து பகவத் பாதாரவிந்தத் திலே வந்து சேர்ந்த படியைக் கூறுகின்ற திங்கு. * யுககோடி ஸஹஸ்ராணி விஷ்ணு மாராத்ய பத்மபூ:, புநஸ் த்ரைலோக்ய தாத்ருத்வம் ப்ராப்தவாநிதி சுச்ரும* என்பது ப்ரஸித்தமான மஹர்ஷி வசனம். நான்முகக் கடவுள் யுக கோடி ஸஹஸ்ரங்களில் விஷ்ணுவை ஆராதித்து மீண்டும் தன் பதவியைப் பெற்றதாக இதில் சொல்லப் பட்டது, பூதத்தாழ்வார் தம்முடைய திருவந்தாதியில் *கோவாகி மாநிலங்காத்து நங்கண்முகப்பே மாவேகிச் செல்கின்ற மன்னவரும், பூமேவுஞ் செங்கமல நாபியான் சேவடிக்கே யேழ் பிறப்பும், தண் கமலமேய்ந்தார் தமர்* என்றருளிச்செய்த பாசுரத்தினுல், இப்போதுள்ள அரசர்கள் யாவரும் எத்தனையோ காலம் எம்பெருமானை ஆராதித்தே அரசர்களாயினர் என்பது தெரிவிக்கப்படுகின்றது; *அஷ்டாபிர் லோக பாலாநாம் மாத்ராபிர் நிர்மிதோ ந்ருப: *நாவிஷ்ணு: ப்ருதிவீபதி:* இத்யாதி ப்ரமாணங்களும் காண்க. நம்மாழ்வாரும் திருவாய் மொழியில் *திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனேயென்னும்* என்கிருர்- அரசர்களைக் கண்டால் எம்பெருமானைக் கண்டதாகச் சொல்லுவதற்குக் காரணமென்னவெனில், இவர்கள் நெடுங்காலம் பகவானை யாராதித்தவர்கள் என்பதுவேயாம். அப்படி அபரிமிதகாலம் ஆராதித்து அரசர்களாகப் பெற்றவர்கள் பதவியை அடைந்த உடனே *ஜீவநக்ரஹணே நம்ரா: க்ருஹீத்வா புநருந்நதா:* என்கிற கணக்கிலே அஹங்காரிகளாகி வணங்காமுடி மன்னர்களாயிருப்பார்கள்; அன்னவர்களும் நாளடைவில் செருக்கொழிந்து பகவானது திருவடி வாரத்திலே வந்து பணியா நிற்பர்கள். எல்லோருமே அஹங்காரிகளாயிருப்பார்களென்று கொள்ளவேண்டா; அஹங்காரிகளாயிருந்தவர்கள் அஹங்காரம் தொலையப் பெறுவர்கள்; சிலர் அஹங்காரமுண்டாகப் பெருமலேயிருப்பர்கள்.

இப்பாட்டில் ''அபிமானபங்கமாய்'' என்றதில் இவ்விரண்டு பொருளையுங் கொள்ளலாம்; *'அபஹதபாப்மா* என்றவிடத்திற்போல. அர்ச்சாவதாரத்தில் பல அரசர்கள் ஆங்காங்கு திவ்ய தேசங்களில் வந்து பணிந்தமை திவ்வியப் பிரபந்தங்களிலே விளங்கா நின்றது. '*தென்னன் தொண்டையர்கோன் செய்த நன் மயிலைத் திருவல்லிக்கேணி* *மன்னவன் தொண்டையர்கோன் வணங்கும் நீண்முடி மாலை வயிரமேகன் தன் வலி தன் புகழ் சூழ்ந்த கச்சி யட்ட புயகரத்து* பல்லவன்வில்லவ னென்றுலகில் பலராய்ப் பல வேந்தர் வணங்கு கழற் பல்லவன் மல்லையர்கோன் பணிந்த பரமேச்சுரவிண்ணகரம்* *செம்பியன் கோச்செங்கணான் சேர்ந்த கோயில் திருநறையூர் மணிமாடம்* என்னுமிவை திருமங்கையாழ்வாரருளிச்செயல்கள். " துளங்கு நீண்முடியரசர்தங் குரிசில் தொண்டை மன்னவன் திண்டிறலொருவற்கு" என்கிற பெரிய திருமொழிப் பாசுரம் விசேஷித்து நோக்கத்தக்கது.

271. (23. மாரிமலைமுழஞ்சில்) — பூவைப் பூ வண்ணன் — பூவைப்பூவென்பது காயாம்பூ. யசோதைப் பிராட்டி கண்ணபிரானையழைக்கும்போது ''காயமலர் நிறவா!'' என்றும் ''காயாம் பூவண்ணங் கொண்டாய்!'' என்றும் அழைப்பது வழக்கம். காயாம் பூவுக்கு வடமொழியில் அதஸீ என்று பெயர்; "அதஸீகுச்ச ஸச்சாயம்" என்றும் "அதஸீ புஷ்பஸங்காசம்" என்றும் வடமொழியாளர் பேசுவர்கள். ஒரு மஹாகவி கர்ணாம்ருத மாகாக் கவி பண்ணுவர்; நரஸ்துதி பண்ணாமல் பகவத்ஸ்துதி பண்ணுவதையே விரத மாகக் கொண்டவர். அவர்தேச ஸஞ்சாரம் பண்ணிவருகையில் மஹாராஷ்ட்ரதேசத்தில் ஒரு மஹாநகரத்தில் தங்கினார். அவ்விடத்தில் ஒரு பெரிய ப்ரபு. அவன் வித்வான் களையும் கவிகளையும் விசேஷமாக ஆதரிப்பவன். இந்த மஹாகவி ஸத்காரம் பெறலா மென்று அந்த பிரபுவிடம் சென்றார். ''என்பேரில் கவி சொன்னால் நான் விசேஷ ஸன்மானம் செய்வேன்'' என்றான் அந்த பிரபு. உன் பெயர் என்ன? என்று கேட் டாரிவர். மாராத் என்பது அவனுடைய பெயராகையாலே அதைச் சொன்னான் பிரபு. உடனே இவர் சுலோகமெழுதி வாசித்தார்;—''அதஸீஸும ஸுகுமாராத் அவயவ ஸௌந்தர்யலேச ஜிதமாராத்; கோபாங்கநா குமாராத் கோந்யோ தேவ: கரோது ஸுகமாராத்'' என்று - தனது விரதம் சிறிதும் குலையாதபடியும் பிரபுவுக்கும் மஹா னந்த முண்டாம் படியும் ஆசுகவி செய்து உத்தம சன்மானம் பெற்றனன் அந்த மஹா கவி. அதஸீஸுமஸுகுமாராத் - பூவைப்பூவண்ணனும், அவயவ ஸௌந்தர்ய லேச ஜித மாராத் - வடிவழகின் ஏகதேசத்தினாலே வெல்லப்பட்ட மன்மதனையுடையவனும், (மாமர:-மந்த:). கோபாங்கநா குமாராத் - யசோதை தன் திருக்குமாரனுமான கண்ணபிரானைக் காட்டிலும், அந்யோ தேவ:க: ஆராத் ஸுகம்கரோது - வேறு எந்த தெய்வம் நம்மை விரைவில் ஸந்தோஷப் படுத்தக்கூடும். என்பது சுலோகத்தின் பொருள். மாராத் என்கிற தன் பெயர் சுலோ கத்தில் ஒரு விசைவந்தால் போதுமென விரும்பினான் பிரபு. கவிச்ரேஷ்டர் நாலு பாதத்திலும் மாராத்தைப் புகவிட்டார்.

272. (24. அன்றிவ்வுலகம்.)—குன்று குடையாவெடுத்தான்—கண்ணபிரானுடைய அதிமாநுஷசீல வ்ருத்த வேஷங்களையும் அதிவ்ருத்தாமர விக்ரமப்ரதாபங்களையுங் கண்டு ஆயர்களனைவரும் இவனே நம் குலகொழுந்து, இவனது சொல்லை நாம் தவறக் கூடாது இவன் கட்டளைப்படியே நாம்.

ஒழுகவேண்டும்' என்று விச்வாஸங் கொண்டிருந்தனர், இங்ஙனமிருக்கையில் சரத் காலம் வந்தது, அப்போது இடையர்கள் வருஷந்தோறும் நடத்துவது போல் வழக் கப்படி இந்திரனுக்குப் பூஜை செய்யப் பற்பல வண்டிகளில் சோறும் தயிரும் நெய் யும் காய்கறிகளும் மற்றுமுள்ள பூஜாத்ரவ்யங்களுமாகிய ஸம்பாரங்கள் பலவற்றை யும் சேகரிப்பதைக் கண்டு கிருஷ்ணன் ' ஓ பெரியோர்களே! நாமும் நம்முடைய பசுக் களும் எதனால் ஜீவிக்கிறோமோ அதற்கே பூஜை செய்வது தகுதி; இக் கோவர்த்தன கிரியே பசுக்களுக்குப் புல்லும் தண்ணீரும் கொடுத்துக் காப்பாற்றுகின்றது. இந்திர னால் நமக்கு என்ன பயனுண்டு? ஒன்றுமில்லை, ஆகையால் நீங்கள் இப்பூசனையனைத்

தையும் இம் மலைக்கே இடுங்கள்' என்ன, இடையர்கள் அதைக் கேட்டு அங்ஙனமே செய்ய, கண்ணபிரான் தானே ஒரு தேவதா ருபங் கொண்டு அவற்றை முற்றும் அமுது செய்தருள, அவ்விந்திரன் கோபத்தோடு புஷ்கலாவர்த்தம் முதலிய பலமேகங் களை ஏவி, கண்ணபிரான் விரும்பி மேய்க்கிற கன்றுகளுக்கும் பசுக்களுக்கும் கண்ண னுக்கு இஷ்டரான இடையர்க்கும் இடைச்சியர்க்கும் தீங்கு தரும்படி கல்மழையை ஏழு நாள் இடைவிடாது பெய்வித்த பொழுது கண்ணன் கோவர்த்தன மலையையெடுத்துக் குடையாய்ப் பிடித்து மழையைத் தடுத்து [அதாவது ஒருவர்மேல் ஒரு துளியும் விழாதபடி செய்து] எல்லாவுயிர்களையும் காத்தருளினன். இவ்வளவு கொடிய தீங்கி ழைத்த அவ்விந்திரனைத் தலை துணித்திட வேண்டியிருந்தும் அது செய்யாதது 'இவ னது உணவைக் கொண்ட நாம் உயிரையுங் கொள்ளக் கடவோமோ!' என்று பெருங் கருணை காட்டியபடியாதலால் "குணம்போற்றி" என்று அந்த மஹா குணத் திற்கு மங்களா சாஸனம் செய்கிறபடி.

273. (25. ஒருத்திமகனாய்.)—நெருப்பென்ன நின்ற நெடுமால்—"நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்" என்றும் "தீயாய் நீராய் நிலனாய் விசும்பாய்க் காலாய்" என்றும் சொல்லுகிறபடியே பஞ்சபூதாத்மகனென்று பிரஸித்திபெற்ற எம் பெருமான் சிலரிடத்திலே நிலமாய், சிலரிடத்திலே நீராய், சிலரிடத்திலே நெருப்பா யிருப்பன். நிலமாயிப்பதாவது "க்ஷமயா ப்ருதிவீஸம:" என்று வால்மீகி பகவானுக்கு நாரதமஹர்ஷி சொன்னபடியே, அநுதாபங்கொள்ளுகிற அபராதிகளிடத்திலே பூமி யின் தன்மையான பொறுமையைக் காட்டுகை. பூமிக்கு ஸர்வம்ஸஹா என்று பெய ரன்றோ. அதுபோல ஸர்வஸஹிஷ்ணுவாயிருப்பனெம்பெருமான், நீராயிருப்பதாவது, நீர் மேட்டுநிலத்திலே ஸ்வத: ஏருமல் நிம்நகா என்கிற ப்ரஸித்திக்கு ஏற்பப் பள்ளத் திலேயே பெருகுமாபோல அஹங்காரிகளாய் மார்பு நெறித்திருப்பவர்களிடத்தில் அணுகாமல் "நீசனேன் நிறையொன்றுமிலேன்" என்று தங்கள் தாழ்வையே அநுஸந்தித்திருக்குமவர்கள் பக்கலிலே தாராளமாகத் தாழ்ந்து பரிமாறுகை. கண் ணன் பாண்டவர்களுக்காகத்] தூதெழுந்தருளுகிறபோது அஹங்காரிகளான பல அர சர்களும் கூடவந்தார்கள்; அஹங்காரமமகாரலேசமு மற்றவரான விதுரரும் கூடவந் தார்; அரசர்களின் மனைகளைக்கண்ணெடுத்தும்பாராமல் "விதுரஸ்யயயௌ வேச்ம" என்கிறபடியே விதுரர் திருமாளிகையிலே புக்கான். நீரின் தன்மை இதுவன்றோ. தங்களை மேடாக நினைத்திருக்கும் அரசர்களை விட்டுத் தன்னைப் பள்ளமடையாக நினைத் திருக்கும் விதுரரகத்தே புக்கானன்றோ. இனி நெருப்பாயிருக்குந் தன்மையை விவ ரிக்க வேணுமோ? கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்றான். கம்ஸனைச் சொன் னது கம்ஸனைப் போன்ற ஆஸுரப்ரக்ருதிகளுக் கெல்லாம் உபலக்ஷணம். தேனுகன் பிலம்பன்காளியனென்னும் தீப்பப் பூடுகளடங்கவுழக்கினவன். மலைபுரை தோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழிய நின்றவன்.

274. (26. மாலேமணிவண்ணா.)—ஆலினிலையான்—ஆலின் இலையான், ஆலின் நிலை யான் என்று இருவகையாகப் பிரிக்கலாம். நம்மாழ்வார் திருவாசிரியத்தில் "நளிர் மதிச் சடையனும் நான் முகக் கடவுளும் தளிரொளியிமையவர் தலைவனும் முதலா, யாவகையுலகமும் யாவரும் அகப்பட, நிலநீர் தீகால் சுடரிருவிசும்பும், மலர்சுடர் பிற வும் சிறிதுடன் மயங்க, ஒரு பொருள் புறப்பாடின்றி முழுவது மகப்படக் கரந்து ஓரா லிலைச்சேர்ந்த எம்பெருமா மாயன்" என்றருளிச் செய்தபடி*அண்டரண்ட பகிரண்டத் தொருமா நில மெழுமால்வரை முற்றுமுண்டு மிகச் சிறியதோர் ஆலந்தளிரில் திருக் கண் வளர்ந்தருளும் அத்புத சக்தி யுக்தன், யசோதைப் பிராட்டி அம்புலியழைக்கும் போது அந்த சந்திரனை நோக்கி "பாலகனென்று பரிபவஞ் செய்யேல், பண்டொரு நாள் ஆலினிலை வளர்ந்த சிறுக்கனவனிவன்" என்று கண்ணனை ஆலினிலை வளர்ந்த சிறுக்கனாகவே சொல்லுவள். "ஊழிதோறூழிபல ஆலினிலையதன் மேல் பைய உயோகுதுயில் கொண்ட பரம்பரனே!" என்றே இவனை விளிப்பள். இனி, ஆலின் நிலையாயென்று பிரித்துப் பொருள் கொள்ளுமிடத்து, "ப்ராப்தாநாம் பாதமூலம்

ப்ரக்ருதிமதுரயா ச்சாயயா தாபஹ்ருத்'' என்று ஸ்ரீஸுதர்சந சதகத்தில் பணித்த படிக்கும், ''காதம்பலவும் திரிந்துழன்றேற்கு அங்கோர் நிழலில்லை நீருமில்லை. உன் பாத நிழலல்லால் மற்றோருயிர்ப்பிடம் நானெங்குங் காண்கின்றிலேன் - திருமாலிருஞ் சோலை யெந்தாய்!'' என்று பெரியாழ்வாரருளிச் செய்தபடிக்கும் தன் திருவடி நிழலிலே ஒதுங்க நினைக்குமவர்களுக்கு நிழலைக்கொடுத்து ஸகல தாபங்களையும் போக்குமவனென்கை, மரங்களில் ஆலமரம் போலே நிழல் தரும் மரம் வேறொன் றில்லையே. நாஸ்திகனொருவன் நெடுநாள்வரை ஈச்வரனே கிடையாதென்று நினைத்திருந்தானும். பிறகு ஒருநாள் வெளியே ஸஞ்சரிக்கத் தொடங்கி விசித்திர மான உலகின் நிலைமைகளைக் கண்டபோது ஓர் ஈச்வரனில்லாமலிருக்க முடியாதென்று நினைத்தானும். ஆனாலும் அந்த ஈச்வரன் ஸர்வாத்மநா ஸமர்த்தனென்று ஒப்புக் கொள்ள முடியாது, சில விஷயங்களில் அவனுக்கு அசட்டுத் தனமும் காண்கிறது; மிகச் சிறிதான பூசினிக் கொடிக்கு மிகப் பெரிதான காயைப் படைத்து, மிகப்பெரிதான ஆலமரத்திற்கு மிகமிகச் சிறிதான காயைப் படைத்திருக்கிறனுகையாலே இப்படி படைத்தவனை ஸமர்த்தனென்று சொல்லமுடியாதன்றோ; ஸாமர்த்தியத்தோடு அஸா மர்த்தியமு முள்ளவன் என்று நினைத்தானும். இப்படி பலவும் பார்த்துக்கொண்டே திரிகையில் மிகவும் சிரமமும் தாபமுமுண்டாக, ஒரு பெரிய ஆலமரம் தென்பட அதன் நிழலிலே படுத்து வெகுநேரம் உறங்கிவிட்டான். பிறகு உணர்ந்தெழுந்திருக்கையில் தன் மார்பு நிறைய ஆலங்காய்கள் விழுந்திருப்பதைக் கண்டானும்; ஹாஹா, ஈச்வ ரன் எவ்வளவு சதுரன்! அவனை அஸமர்த்தனென்று நினைத்தேனே! இம்மரத்திற் குப் பெரிய காய்களைப் படைத்திருந்தானுகில் நமது மார்பு பிளந்து போயிருக்குமே. இதன் நிழலை ஒருவராவது அநுபவிக்க முடியுமா? பூசினிக் கொடியிலே பெரியகாய் களைப் படைத்தான், ஆனால் அவற்றை அந்தக் கொடியா தாங்குகிறது. ஸர்வம் ஸஹையான பூமியன்றோ தாங்குகிறது. பூசினிக் கொடியின் நிழலிலே ஒதுங்க நினைப் பாருளரோ? ஆலமரத்திற்கு, நிழல் தருவதையே முக்கிய பலனுக நினைத்து இதைப் படைத்தானுதலால் அந்நிழலை யடைவார்க்கு அபாயம் நேராதபடி சிறிய காய்களைப் படைத்தது எவ்வளவு சாதுர்யகார்யம்! ஈச்வரனைப் போன்ற ஸமர்த்தன் ஒருவனு மிலன் என்று முடிவு செய்துகொண்டு வீடு சேர்ந்தானும். ஆக ஆலின் நிலையான எம்பெருமான். பாதநிழல் தந்து அடியாரைப் பரிபாலிக்குமவனென்றபடி.

275. (27. கூடாரை வெல்லுஞ்சீர்)—கூடாரை வெல்லுஞ் சீர்க் கோவிந்தன்— கூடாதவர்களைத் தோற்பிக்க வல்ல சீர்களை—திருக்கல்யாண குணங்களை யுடையவன் என்றபடி. கூடாதவர்கள் யாவரென்னில்; தன் பக்கல் பகை பாராட்டி விரோதி களாயிருப்பவர்கள், அவர்களை சௌர்ய வீர்ய பராக்கிரமங்களாகிற குணங்களாலே வெல்லுபவன். அன்றிக்கே, தன்னிடத்தில் பகையு மின்றிக்கே நட்புமின்றிக்கே உதாஸினர்களாயிருக்கு மவர்களும் கூடாதவர்களே; அப்படிப் பட்டவர்களையும் அழகாலே யீடுபடுத்திக் கொள்பவன். ''சூதனுய்க் கள்வனுகித் தூர்த்தரோடிசைந்த காலம் மாதரார் கயற்கணென்னும் வலையுள்பட்டழுந்துவேனை, போதரே யென்று சொல்லிப் புந்தியிற் புகுந்து தன்பாலாதரம் பெருகவைத்த வழகன்'' என்கிற திருமாலைப் பாசுரத்தை இங்கே நினைப்பது. தொண்டரடிப் பொடியாழ்வார் தாம் முதலிலே ஸ்ரீ ரங்கநாதனிடத்திலே பகையுமின்றிக்கே நட்பு மின்றிக்கே அந்யபரராக இருந்ததாகவும் அக்காலத்தில் அரங்கனுடைய வடிவழகு தம்மை ஆகர்ஷித்ததாகவும் இப் பாட்டிலே காட்டியருளினர். அன்றிக்கே * வளவேழுலகின் முதலாய வென்று தொடங்கும் திருவாய்மொழியிலே ஆழ்வார் நைச்சியா நுஸந்தானத்தினுல் எம்பெருமா னேடு கூடாதாராயினர்; அன்னவரை '' தளர்வுற்று நீங்க நினை மாறனை மால் நீடிலகு சீலத்தால் பாங்குடனே சேர்த்தான் பரிந்து'' என்கிற திருவாய் மொழி நூற்றந்தாதி யின்படியே எம்பெருமான் தன்னுடைய சீல குணத்தைக் காட்டி யீடுபடுத்திக் கொண்டானுதலால் இதை யிட்டும் கூடாரை வெல்லுஞ்சீர்க் கோவிந்தனுவன், அன்றித்கே, அநவரதமும் கூடியிருக்கின்றவர்களுங் கூட ஊடல் என்கிற பிரணய ரோஷத்தினுல் * மின்னிடை மடவார்ப் பதிகத்திலே '' உன்னுடனே கூடேனென்றூடுங்

குருகையர் கோன்'' என்கிற நூற்றந்தாதிப் பாசுரத்தின் படியே கூடாதவர்களாளவில் அன்னவர்களை எம்பெருமான் தன்னுடைய ச்ருங்கார சேஷ்டிதஸாமர்த்திய விசேஷத்தினுல் ஈடுபடுத்திக் கொள்ளுவன். ஆக, பகையினுல் கூடாதவர்களைத் தோற்பித்துக் கொள்ள வல்ல சௌர்ய வீரியாதி குணங்களையுடையவன்; உதாஸீநர்களாயிருந்து கூடாதவர்களை யிடுபடுத்திக் கொள்ள வல்ல அழகையுடையவன், நைச்சியா நுஸந்தானத்தாலே அணுகாதவர்களை யிடுபடுத்திக் கொள்ள வல்ல சில குணத்தையுடையவன், ப்ரணய ரோஷத்தாலே கதவடைத்துத் தள்ளிக் கூடமாட்டோமென்றிருப்பாரையும் ஈடுபடுத்திக் கொள்ள வல்ல ச்ருங்கார சேஷ்டித சாதுர்ய குணமுடையவன் என்றதாயிற்று,

276. (28· கறவைகள்)—குறை யொன்று மில்லாத கோவிந்தன்—குறையில்லாத கோவிந்தன், குறை யொன்றில்லாத கோவிந்தன், குறை யொன்றுமில்லாத கோவிந்தன் என்று மூன்று வாக்கியமாக வகுத்துப் பொருள் கொள்க. *உயர்வற வுயர்நல முடையவனுகையாலே திருக் குணங்களில் குறையில்லாதவன்; *பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே ஆள்கின்ற செங்கோலுடைய திருவரங்கச் செல்வனுகையாலே ஐச்வரியத்தில் குறையில்லாதவன்; *உயிரளிப்பான் எந் நின்ற யோனியுமாய்ப் பிறந்த இமையோர் தலைவனுகையாலே திருவவதாரங்களில் குறையில்லாதவன்—அவாப்த ஸமஸ்த காமன் என்றவாறு. ஸ்ரீவசனபூஷணத்திலே (134.) ''ப்ரபந்நயுபாயத்துக்கு இக் குற்றங்களொன்றுமில்லை'' என்ற விடத்து வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள் ''இக் குற்றங்களொன்றுமில்லை யென்கையாலே மற்றொரு குற்றமுண்டென்று மிடம் தோற்றுகிறது......'' என்றருளிச் செய்த கணக்கிலே குறையொன்று மில்லாத கோவிந்தனுக்கும் ஒரு குறையுண்டென்ன வேண்டியிரா நின்றது. அது என்னெனில்; ஸம்ஸாரம் கிழங்கெடுக்க வேணுமென்று தான் எத்தனை முயற்சிகள் செய்தும் பலிக்கவில்லையே யென்கிற குறையொன்றே யிருந்தது. ஆழ்வாராசாரியர்களைத் திருவவதரிப்பித்து அந்தக் குறையும் தீர்த்துக் கொண்டானுயிற்று. *பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணி கொள்வான்* என்று ஸ்ரீ மதுரகவிகளால் போற்றப் பட்ட நம்மாழ்வாராலும், ''நீ இந்த மண்ணகத்தே திருத்தித் திருமகள் கேள்வனுக்காக்கிய பின் நலத்தைப் பொறுத்த திராமானுச!'' என்று அமுதனுரால் புகழப் பட்ட எம்பெருமானுராலும் அக் குறையும் தீரப் பெற்றானென்க. ஆகவே குறையொன்றுமில்லாத கோவிந்தன்.

277. (29. சிற்றஞ்சிறுகாலே வந்து)—பெற்றம் மேய்த்துண்ணுங் குலத்திற் பிறந்த கோவிந்தன்—நித்ய ஸூரிகளின் திருவோலக்கத்திலே ஏழுலகும் தனிக் கோல் செல்ல வீற்றிருக்கு மிருப்பைத் தவிர்ந்து பசுக்களை மேய்த்து வயிற்றை வளர்க்கு மிவ்விடைக் குலத்திலே வந்து பிறந்த கோவிந்தன் என்பது பதப் பொருள். இவ்வாருக இப்பாட்டிலே சொல்லுவதற்குக் காரணம் கேண்மின். கீழே 28-ஆம் பாட்டில் ''உன்தன்னைச் சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே'' என்ற விடத்திற்கு வியாக்யானம் செய்தருளின நம் பூருவாசாரியர்கள் கோபிகள் அனைவரும் கண்ணபிரானுடைய ஸௌலப்ய ஸௌசீல்யாதிகளான நீர்மைக் குணங்களிலே மிக மிக ஈடுபட்டவர்களாகையாலே இவர்களுடைய கொள்கையின்படி அவனுடைய பரத்துவம் பயனற்றதாய், அந்த பரத்துவத்திற்கு ஐகாந்திகமான நாராயண நாமம் சிறு பெயராய்த் தோன்றி, கோபாலன் கோவிந்தன் தாமோதரன் நவநீதசோரன் என்பன போன்ற தாழ்ந்த திருநாமங்களே பெரிய பெயர்களாய்த் தோன்றினபடியாலே கீழே *நாராயணனே நமக்கே* என்றும், *நாற்றத்துழாய்முடி நாராயணன்* என்றும் சிறிய பெயரையிட்டுச் சொன்னதற்கு க்ஷமை வேண்டுகிருர்களென்று வியாக்கியானம் செய்தருளினுர்கள். நாராயண நாமத்தைச் சிறு பேரென்று சொல்லுவது மஹாபசாரமாகையாலே ப்ராஜ்ஞர்களும் ப்ராமாணிகர்களுமான பூருவாசாரியர்கள் இப்படி வியாக்கியானம் செய்வது தகுதியா என்று சிலர் மனங் குழம்பியிருக்கக் கூடும்.

அந்தக் குழப்பத்தைப் போக்குவதற்கே இப்பாட்டில் **கோவிந்தா!** என்னும் விளி அமைக்கப்பட்டது. நாராயண நாமத்தைப் பெரிய நாமமென்றும் கோவிந்த கோபாலாதி நாமங்களைச் சிறிய நாமங்களென்றும் கோபிகள் எண்ணியிருப்பார்களாகில் "உன்றன்னைச் சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே" என்று க்ஷமை வேண்டின வுடனே மறுபடியும் கோவிந்தா வென்று சிறு பேரையிட்டு அழைக்கக் கூடாதன்றோ? ஆக, கீழ்ப்பாட்டில் க்ஷமை கொள்வதற்கு விஷயபூதமான சிறு பேர் நாராயண நாமந் தானென்று காட்டுதற்கே இப்பாட்டில் இங்ஙனே விளி அமைந்ததென்றுணர்க.

278. **(30. வங்கக் கடல்.) – கடைந்த மாதவன் –** ஏற்கெனவே மாதவனாயிருந்து கடலைக் கடைந்தானா? கடல் கடைந்த பிறகு மாதவனாயினனா? என்றொரு விசாரம். மாதவனென்றால் லக்ஷ்மீபதியென்று பொருள். எம்பெருமான் ஒருகால் லக்ஷ்மீ ஸம்பந்தமில்லாமலிருந்து மற்றொருகால் லக்ஷ்மீஸம்பந்தம் பெற்றானென்பது ஸம்பாவிதமாகுமோ? லக்ஷ்மீபதித்வம் அவனுக்கு ஸ்வாபாவிகமே. ஆயினும், பட்டர் வங்கக் கடல்கடைந்த மாதவனென்பதற்கு வங்கக் கடல்கடைந்ததனால் மாதவனாயினனென்று இன்சுவைப் பொருள் திருவுள்ளம்பற்றி ஸ்ரீ ரங்கராஜஸ்தவ—உத்தர சதகத்தில் "உந்மூல்யாஹர மந்தராத்ரி மஹிநா" என்னும் சுலோகத்தினால் கடல்கடைந்தவாற்றைப் பூர்வார்த்தத்தாலே ஸாதித்து "பலேக்ரஹிர்ஹி கமலாலாபேந ஸர்வச் ச்ரம:" என்று தலைக்கட்டியருளினர். ஸத்யகாமனும் ஸத்யஸங்கல்பனுமான எம்பெருமானுக்குக் கடல்கடைகை அநாயாஸகார்ய மேயாயினும் திருமேனியில் ஸௌகுமார்யத்தை நினைப்பவர்களுக்கு அது மஹத்தான சிரமமாகவே தோன்றும். அந்த சிரமமெல்லாம் முடிவில் பிராட்டியைப் பெற்றதனாலே ஸபலமாயிற்றென்று ரஸோக்தியாக வருளிச் செய்தார். ஆக, வங்கக் கடல் கடைந்ததனால் மாதவனாயினன் என்று கொள்ளப் பொருந்தும். ஆண்டாள் திருவடிகளே சரணம். ஜீயர் திருவடிகளே சரணம்.

துவேதமனைத்துக்கும் வித்தாகுங்கோதை தமிழ் வாழி.

ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியர் எழுதிய**

**சோபக்ருதாண்டு மார்கழி விருந்து**

**முற்றுப்பெற்றது.**

# ஸதுபந்யாஸ ரத்நாவளி

ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசாரியர்.

## 1. "நம்பி பிம்பி யென்று"

பெரியாழ்வார் திருமொழியில் நான்காம் பத்தில் ஆறுவது பதிகம் "காசுங் கறையுடைக் கூறைக்கும்" என்று தொடங்குவது. இப்பதிகத்தின் ப்ரமேயம் என்னவென்றால், உலகில் அவரவர்கள் தந்தம் மக்களுக்குப் பெயரிடும் போது க்ஷுத்ரபலன்களை நச்சி க்ஷுத்ர தெய்வங்களின் பெயர்களையும் மற்றும் பொருளற்ற பல பெயர்களையும் இடாமல் ஸ்ரீமந் நாராயணனுடைய திருநாமங்களை இடவேணுமென்று பரோபதேசஞ் செய்வதே இப்பதிகத்தில் ஆழ்வார் எடுத்துக் கொண்ட விஷயம். நிகமனப்பாசுரத்தில் "சிரணிமால் திருநாமமேயிடத்தேற்றிய வீரணி தொல் புகழ் விட்டு சித்தன் விரித்த" என்றிருப்பது கொண்டும் இதனையறியலாம். பாசுரந்தோறும் "கேசவன் பேரிட்டு நீங்கள் தேனித்திருமினோ" என்றும், "செங்கணெடுமால் சிரீதராவென்றழைத்தக்கால்" என்றும் "எம்பிரான் திருநாமமே நச்சுமின்" என்றும்.......இப்படி பகவந்நாமங்களை யெடுத்துரைத்து இவற்றையே மக்களுக்கு இடவேணுமென்றும், இப்படி யிட்டால் இடுகிற மாதா பிதாக்களுக்கு நரக ப்ராப்தியே நேராதென்றும் அருளிச் செய்யப்படுகிறது.

இங்ஙனே உபதேசிக்குமிப்பதிகத்தில் எட்டாவது பாசுரம் "நம்பி பிம்பி யென்று நாட்டு மானிடப் பேரிட்டால், நம்பும் பிம்பு மெல்லாம் நாலு நாளிலழுங்கிப் போம், செம்பெருந்தாமரைக் கண்ணன் பேரிட்டழைத்தக்கால், நம்பிகாள் நாரணன் தம்மன்னை நரகம்புகாள்" என்றுள்ளது. இதனால், மக்களுக்கு நம்பியென்று பெயரிடுவதும் கூடாதென்று ஆழ்வாருடைய திருவுள்ளம் வெளியாகின்றது. நம்பி யென்கிற பெயரோடு பிம்பியென்கிற ஒரு (அர்த்த மற்ற) பெயரையும் கூட்டி, நம்பி யென்று பெயரிடுவதோடு பிம்பி யென்று பெயரிடுவதோடு ஒரு வாசியில்லை யென்று எளிதாகத் தெரிந்து கொள்ளும்படி பாசுர மருளிச்செய்திருக்கையாலே. இங்கே வலிதான் சங்கையொன்று தோன்றுகின்றது. நம்பியென்பது எம்பெருமானுடைய திருநாமமாகத் திவ்வியப்பிரபந்தங்களிற் பலவிடங்களில் தெரியவருகின்றது. இப்பெரியாழ்வாரது திருமொழியிலேயே இப்பதிகத்திற்குக் கீழும் மேலும் பலவிடங்களிலும் "சாளக்கிராமமுடைய நம்பி" 'வாமன நம்பி' 'காகுத்த நம்பி' 'நாரண நம்பி' 'உலகு தன்னை வாழ நின்ற நம்பி' என்று அருளிச் செய்யப்பட்டிருக்கின்றது. திருவாய்மொழி முதலானவற்றிலும் "நம்பியைத் தென்குறுங்குடிநின்ற" "நல்கி யென்னை விடான் நம்பி நம்பியே" "தன்னம்பி நம்பியுமிங்கு வளர்ந்தது" என்றிவை போலும் பல பாசுரங்கள் எம்பெருமானுக்கு நம்பியென்கிற திருநாமமுண்டென்பதைக் காட்டுகின்றன. இப்படியிருக்க, நம்பி யென்பதை நாட்டுமானிடப் பேராகப் பெரியாழ்வார் இங்கு அருளிச் செய்தது எங்ஙனே பொருந்தும்? என்கிற சங்கை பலருடைய மனத்திலும் தோன்றக் கூடியதே.

### இதற்கு ஸமாதானம் கேண்மின்

வட மொழியில் ஸித்தாந்த கௌமுதியென்பது மிகச் சிறந்த வியாகரண நூல். அதில் முகப்பிலேயே "முநித்ரயம் நமஸ்க்ருத்ய ததுக்தி: பரிபாவ்ய ச" என்றார். வரருசி, பதஞ்ஜலி, பாணினி யென்னும் மஹர்ஷிகள் மூவரையும் வணங்கி அவர்

களின் உக்திகளைச் சிந்தனை செய்த என்பது வக்தாவின் விவக்ஷை. ஆனால் பரிபாவ்ய என்கிற ல்யபந்தத்திற்குப் பரிபவமடையச் செய்து என்கிற பொருள்தான் ஒவ்வொருவர்க்கும் ஸ்வரஸமாகத் தோன்றக் கூடியது. ப்ரயோகித்தவர் ஸாமாந்ய ரல்லாமையாலே அவருடைய ஹ்ருதயத்தையே பரமப்ரமாணமாகக் கொண்டு பரிபவப் பொருளைவிட்டு சிந்தனைப் பொருளைக் கொள்ளுகிறோம். அவ்விதமாகவே இங்கும் காணவேணும். ஸர்வஜ்ஞரான பெரியாழ்வார் அவத்தமாக அருளிச் செய்ய மாட்டார். நாராயணனுக்கும் நம்பி யென்கிற திருநாமமுண்டென்பதில் அவ்வாழ் வார்க்கு விப்ரதிபத்தி யிருக்க நியாயமில்லை. நம்பியென்று பெயரிடுமவர்கள் இது நாராயண நாமமென்கிற ப்ரதிபத்தியோடல்லாமல் செல்வம் மிகுந்தவன் என்கிற பொருளை மாத்திரங்கொண்டு இந்திரன் குபேரன் என்றிப்படிப்பட்ட பெயர்களை யிடுவது போலவே இதையும் இடுகிறவர்களாயிருப்பதால் அன்னவர்களை க்ஷேபிக் கிறார் என்று இவ்வளவே இங்கு நாம் கூறலாம். வேறு வகையான ஸமாதானங் களைக் கூறவல்ல மஹான்களுளரேல் அன்பு கூர்ந்து கூறுக. ... .... *

## 2. திருமந்த்ர ப்ரபாவம்.

திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்திற்குத் திருமந்த்ரமென்று பெயர். அவரவர் களுக்கு அபேக்ஷிதங்களான அசேஷபலன்களையும் அளிக்கவல்லது இந்தத் திரு மந்த்ரம். "குலந்தரும் செல்வம் தந்திடுமடியார் படுதுயராயினவெல்லாம் நிலந்தரஞ் செய்யும் நீள்விசும்பருளும் அருளொடு பெருநிலமளிக்கும் வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்ற தாயினுமாயினசெய்யும் நலந்தருஞ்சொல்லை நான்கண்டுகொண்டேன் நாரா யணாவென்னும் நாமம்" என்பது திருமங்கையாழ்வாரருளிச்செயல். இதன் பொரு ளாவது—நாராயண நாமமானது தன்னை அநுஸந்திக்குமவர்கட்கு உயர்ந்த குலத் தைக் கொடுக்கும்; ஐச்வர்யத்தை யளிக்கும்; அடியவர்கள் அநுபவிக்கிற துக்க மென்று பேர் பெற்றவை யெல்லாவற்றையும் தரைமட்டமாக்கி விடும்; பரமபதத் தைக் கொடுக்கும்; எம்பெருமானுடைய க்ருபையையும் உண்டாக்கும்; பகவதநுபவத் திற்குப் பாங்கான சக்தியைக் கொடுக்கும்; இன்னமும் வேண்டிய நன்மைகளை யெல்லாம் செய்து கொடுக்கும் என்கை. ஆகையாலே அதிகாராநுகுணமாக அபே க்ஷிதங்களை யெல்லாம் இத்திருமந்த்ரம் தருமென்றதாயிற்று.

எல்லாவபேக்ஷிதங்களையுங் கொடுக்குமென்று கீழ்சொன்னதை விசதீகரிப் போம். ஐச்வரியமானது இஹலோகத்துச் செல்வமென்றும் பரலோகத்துச் செல்வ மென்றும் இருவகைப்படும். இந்நிலவுலகின்கண் ராஜாதிராஜனாய் விளங்குவது இஹலோகத்துச் செல்வமாகும். சுவர்க்கம் முதலிய மேலுலகங்களில் பல பதவிகளை நிர்வஹிக்கப் பெறுவது பரலோகத்துச் செல்வமாகும். ஆக இவ்விருவகையான ஐச்வரியங்களையும், பரிசுத்தாத்ம ஸ்வரூபத்தை யநுபவிப்பதாகிற கைவல்ய மோக்ஷத் தையும், பரம புருஷார்த்தமான பகவத் ப்ராப்தியையும் ஆசைப்பட்டவர்களுக்கு இத்திருமந்திரமானது ஜபம் ஹோமம் முதலிய வழிகளாலே தானே ஸாதனமா யிருந்து கொண்டு அந்தந்தப் பேறுகளைக் கொடுக்கும். * ஐஹலௌகிகமைச்வர்யம் ஸ்வர்க்காத்யம் பாரலௌகிகம், கைவல்யம் பகவந்தஞ்ச மந்த்ரோயம் ஸாதயிஷ்யதி.* என்ற பிரமாணம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

கர்மயோகம் முதலான உபாயங்கள் நிறைவேறுவதற்குத் துணையாயிருக்கை யாகிற வைபவமும் இத்திருமந்திரத்திற்கு உண்டு. கர்மயோகமாவது, *கர்மயோகஸ் தபஸ்தீர்த்த தாநயஜ்ஞாதிஸேவநம்* என்று கீதார்த்த ஸங்க்ரஹத்தில் ஆளவந்தார் அருளிச்செய்தபடி தவம், வேள்வி முதலானவற்றைப் பலன் பெறுமளவும் ஆதரத் தோடும் நியமத்தோடும் நிரந்தரமாகப் பரிக்ரஹிக்கையாம். ஜ்ஞாநயோகமாவது, *ஜ்ஞாநயோகோ ஜிதஸ்வாந்தை: பரிசுத்தாத்மநி ஸ்திதி:* என்கிறபடியே இந்த்ரியஜய

பூர்வகமாய் நிரந்தர சிந்தந ரூபமாகப் பரிசுத்தாத்மத்யானத்திலே ஊன்றியிருக்கையாம். பக்தியோகமாவது *பக்தியோக: பரைகாந்தப்ரீத்யா த்யாநாதிஷு ஸ்திதி:* என்கிறபடியே, பரமபுருஷனிடத்திலே ஐகாந்திகமான ப்ரீதியோடே த்யானம் அர்ச்சனம் ப்ரணாமம் முதலியவற்றிலே நிலைத்திருக்கையாம். ஆக இப்படிப்பட்ட யோகங்களுக்குள்ளே, கர்மயோகத்தில் சிலர் இழிந்தால் அவர்கள் ஜபம் ஹோமம் முதலியவற்றாலே இத் திருமந்த்ரந்தன்னைத் துணை கொள்ளுமளவில், கர்மயோகத்தை ஆரம்பிப்பதற்கே இடையூறாய் நிற்கும் பாபங்களைப் போக்கி அந்த யோகம் இடையறாது செல்லும்படியாக அதனை நிறைவேற்றிக் கொடுக்கும் இத் திருமந்த்ரம். கர்மயோகத்தில் இழியாதே முதலிலேயே ஜ்ஞானயோகத்தில் இழிந்தால், அவர்கள் இத்திருமந்த்ரத்தைத் துணை கொள்ளுமளவில், கர்மயோகஸாத்யமான ஜ்ஞானயோகத்தின் ஆரம்பத்திற்கு இடையூறான பாபங்களைப் போக்கி அந்த ஞானயோகம் நாடோறும் அதிசயம் பெறும்படி பண்ணி நின்றுகொண்டு அதைத் தலைக்கட்டிக் கொடுக்கும். பக்தியோகத்திலே யிழிந்தால் அவர்கள் இத்திருமந்த்ரத்தைத் துணை கொள்ளுமளவில், பக்தியோகத்தை ஆரம்பிக்க வொட்டாமல் தடைசெய்யும் பாவங்களைப் போக்கி அந்த பக்தியோகம் வளரும்படி செய்வதாய்க் கொண்டு அதை நிறைவேற்றித்தரும்.

கீழ்ச்சொன்ன கர்மஜ்ஞான பக்தியோகங்கள் அனுஷ்டிக்க அரியனவாயும், ஸ்வரூபவிருத்தங்களாயுமிருப்பது கண்டு அவற்றில் இழியாமே எளிதாயும் ஸ்வரூபாநுரூபமாயுமுள்ள ப்ரபத்தியிலே யிழிந்தால் அவர்களுக்கு அதற்குத் தகுதியான 'பகவத் பாரதந்திரியமாகிற ஸ்வரூபத்தின் உணர்ச்சியைப் பிறப்பித்து அர்த்தாநுஸந்தானம் முதலியவற்றால் போது போக்குகைக்குக் காரணமாயும், *எனக்கென்றும் தேனும் பாலுமமுதுமாய திருமால் திருநாமம், நானுஞ் சொன்னேன் நமருமுரைமின் நமோ நாராயணமே* என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடியே *எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே திருமாலிருஞ் சோலைக்கோனே* என்கிற எம்பெருமானைப் போலே இதுதானும் ஸ்வயம் பரமபோக்யமாயிருக்கையாலே போகத்துக்கு ஹேதுவாயுமிருக்கும்.

அறியவேண்டிய அர்த்தங்களையெல்லாம் தன்னிலே உடைத்தாயிருக்கையாகிற பெருமையும் இதற்குண்டு. திருமங்கையாழ்வார் *மற்றுமோர் தெய்வமுளதென்றிருப்பாரோடுற்றிலேன், உற்றதும் உன்னடியார்க் கடிமை, மற்றெல்லாம் பேசிலும் நின் திருவெட்டெழுத்துங்கற்று நான், கண்ணபுரத்துறையம்மானே :* என்றார். இதன் பொருளாவது:—திருக்கண்ணபுரத் தெம்பெருமானே! உன்னைக் காட்டிலும் வேறொரு தெய்வம் ஆச்ரயிக்க உரியதாகவுண்டு என்று நினைத்திருப்பவர்களோடே நான் இணங்கமாட்டேன்; உனது திருவஷ்டாக்ஷர மந்திரமானது அறிய வேண்டிய எல்லாப் பொருள்களையும் சொல்லுகின்றதாகிலும் அப்பொருள்களிலே நெஞ்சு செலுத்தாமல் பாகவத சேஷத்வமொன்றையே திருமந்திரப் பொருளாக நான் தெரிந்து கொண்டேனென்கை. இதில் "மற்றெல்லாம் பேசிலும்" என்றபடியாலே ஆத்மா உஜ்ஜீவிப்பதற்கு உறுப்பான அர்த்தங்களெல்லாம் இத்திருமந்த்ரத்திலே உண்டென்பது சித்தமாயிற்று.

வேதங்களும் வேதாங்கங்களுமெல்லாம் ஐந்து அர்த்தங்களையே முக்கியமாக ப்ரதிபாதிக்கின்றன; அவையாவன—ப்ராப்யனான எம்பெருமானுடைய ஸ்வரூபம், ப்ராப்தாவான சேதநனுடைய ஸ்வரூபம், எம்பெருமானை யடைதற்குறுப்பான உபாயத்தின் ஸ்வரூபம், அடைந்து பெறவேண்டிய பேற்றின் ஸ்வரூபம், அப்பேற்றைப் பெறவொட்டாத பிரதிபந்தகத்தின் ஸ்வரூபம் என்பனவாம். இவையே அர்த்த பஞ்சகமெனப்படும். "மிக்க இறை நிலையும் மெய்யாம் உயிர்நிலையும், தக்க நெறியும் தடையாகித் தொக்கியலும் ஊழ்வினையும் வாழ்வினையுமோதுங் குருகையர்கோன்

யாழினிசை வேதத்தியல்'' (திருவாய்மொழித்தனியன்) என்கிறபடியே திருவாய்மொழியாயிரத்தினுள்ளும் இவ்வர்த்த பஞ்சகமே விவரிக்கப்பட்டுள்ளதென்பதும் இங்கு உணரத்தக்கது. திருமந்த்ரத்தில் ப்ரணவத்தாலே சேதநஸ்வரூபத்தையும், நமஸ்ஸாலே விரோதியினுடையவும் உபாயத்தினுடையவும் ஸ்வரூபத்தையும், நாராயண பதத்தாலே பரம புருஷனது ஸ்வரூபத்தையும், அதில் சதுர்த்தியாலே புருஷார்த்த ஸ்வரூபத்தையும் பிரதிபாதிக்கையாலே திருமந்திரம் அர்த்த பஞ்சக ப்ரதிபாதகம் என்னுமிடம் தேறிநிற்கும்.

ஸ்ரீமந் நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானர் முதலான நம்முடைய பூருவாசார்யர்கள் திருமந்திரத்தின் பொருளைத் தாங்கள் அறிவதற்கு முன்னம் *அன்று நான் பிறந்திலேன்* என்கிற திருமழிசை யாழ்வாரருளிச் செயலின்படி தங்களைப் பிறந்தவர்களாகவே நினைத்திருக்கமாட்டார்கள்; இதன் பொருளை நன் குணர்ந்த பின்பு *பிறந்த பின் மறந்திலேன் என்கிற அவ்வாழ்வாரருளிச் செயலின் படியே இத்திருமந்திரத்தின் அர்த்தத்தைத் தவிர்த்து வேறு எது கொண்டும்போது போக்கியறியார்கள்.

"அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்'' என்கிற பாசுரம் திருச்சந்த விருத்தத்தில் அறுபத்து நான்காவது. ஞானமில்லாதபோது ஆத்மாவுக்கு ஸத்தையில்லையென்கிற நூற்கொள்கையைக் கொண்டு *அன்று நான் பிறந்திலேன்* என்றது. எம்பெருமான் மயர்வற மதிநலமருளின பின்பு ஸத்தைபெற்று சாச்வதமாக உஜ்ஜீவிக்கப்பெற்றபடியைக் கொண்டு *பிறந்த பின் மறந்திலேன்* என்றது. திரு மந்த்ரப் பொருளின் உணர்ச்சியில்லாமை ஸத்தாஹாநி. அந்த ஞானத்தின் இடை யறுத நிகழ்ச்சி—ஸத்தை என்றதாயிற்று. "பூர்வாசாரியர்கள் இத்தையொழிய வேறென்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்'' என்று சொல்லத் தகுமோ? வேத சாஸ்த்ரங்களாலும் ஆழ்வாரருளிச் செயல்களாலும் போது போக்குவதில்லையோ? என்று சிலர் சங்கிக்கக்கூடும்; அஃது உண்மையே; அவற்றால் போதுபோக்கும் போது இத்திருமந்த்ரத்தின் அர்த்தத்தை உட்கொண்டே அநுஸந்திக்கையாலே இங்ஙனே சொல்லக் குறையில்லையென்றுணர்க. .... .... *

## 3. ஸ்ரீராமாயணத்தில் ஒரு சிறுவிஷயம்.

ஸ்ரீராமாயண வியாக்கியானங்களுள் ஸ்ரீகோவிந்தராஜீயம் மிகச் சிறந்த வியாக்கியானமாகக் குலாவப்படுகின்றது. ஸ்மார்த்த மாத்வப்ரப்ருதிகளும் இந்த வியாக்கியானத்தை மெச்சுகிறார்களென்று தெரியவருகிறது. கோவிந்தராஜர் என்னும் பெரியார் செய்த வியாக்கியானமாதலால் கோவிந்தராஜீயமென்று பேர் பெற்றிருக்கிறது. இவ்வாசிரியர் பூருவாசாரியர்களின் காலத்திற்கு மிகவும் பிற்பட்ட வரென்று தெரிகிறது. நம்பிள்ளையீட்டிலும் பெரியவாச்சான்பிள்ளை தனிச்லோகம் முதலான வியாக்கியானங்களிலும் இன்சுவை பொலிய அருளிச்செய்யப்பட்டுள்ள விசேஷார்த்தங்களை யெல்லாம் பெரும்பாலும் இவர் தம்முடைய வியாக்கியானத்தில் மொழிபெயர்த்து எழுதியிருப்பதனாலேயே இவருடைய வியாக்கியானத்திற்குப் புகழ் விளைந்ததென்று சொல்லலாம். சிலவிடங்களில் இவர் பூருவர்களின் வியாக்கியான ஸரணியை மறந்து வேறாக வியாக்கியை செய்திருப்பது முண்டென்று அடியே னுடைய ஆராய்ச்சியில் தோன்றியதைச் சிறிது விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன். இதனால் கோவிந்தராஜீயத்திற்கு ஒருமறுப்பு எழுதுவதாக ஒருவருமெண்ணத்தகாது.

பெருமாள் இராவணஸம்ஹாரம் செய்து தலைக்கட்டிப் புஷ்பகவிமானத்தில் திருவயோத்திக்கு மீண்டெழுந்தருளும் போது பரத்வாஜாச்ரமத்தில் ஆதித்த்யம் ஸ்வீ கரிக்கத் தங்கினரன்றோ. அப்போது பரதாழ்வானுடைய நிலைமையை பரத்வாஜ முனிவர் கூறுகின்றார். "பங்கதிக்தஸ் து ஜடிலோ பரதஸ் த்வாம் ப்ரதீக்ஷதே'

என்று. இங்கு பரதாழ்வானுக்கு பங்கதிக்தঃ என்று விசேஷணமிட்டிருக்கிறது. சேறு பூசப்பெற்றவன் என்றபடி. பரதாழ்வான் எதனாலே சேறு படிந்தவனானென்று ஜிஜ்ஞாஸை பிறக்குமே; இதற்கு கோவிந்தராஜர் இரண்டு வகையாக எழுதியுள்ளார். பரதாழ்வான் சடைபுனைந்திருப்பதனால் ஸ்நானம் செய்வதே கிடையாது. அதனால் உடம்பெல்லாம் புழுதியேறிக் கிடக்கிறது. "கதம் நு அபரராத்ரேஷு ஸரயூமவகாஹதே" என்கிறவசனத்தினால் பரதாழ்வான் ஸரயுவிலிறங்கி ஸ்நானம் செய்வதாகத் தெரியவருகிறதே யென்னில், அது நித்ய ஸ்நானபரமன்று; கதாசித் செய்யப்படுகிற நைமித்திக ஸ்நானத்தைச் சொன்னதாகலாம்—என்பது முதல்வகை. இனி இரண்டாம் வகையாவது. பரதாழ்வான் மண்தரையிலேயே சயனிப்பவனாகையாலே சேறுபடிந்த மேனியனாயினன் என்பதாம்.

பரதாழ்வான் நாடோறும் த்ரிஷவணஸ்நானமும் செய்திருக்கக் கூடும்; நித்ய ஸ்நானமும் செய்யாதிருந்தனன் என்பதை யாவரும் த்ருப்தியுடன் அங்கீகரிப்பர்களாவென்று ஆலோசிக்க வேண்டியிருக்கிறது. தரைக்கிடை, கிடப்பதனால் 'பாம்ஸுதிக்தঃ" என்று சொல்லத் தகுமேயொழிய பங்கதிக்தঃ என்று சொல்ல ஔசித்யமிருக்குமா வென்பதும் ஆலோசிக்கத் தக்கது. *கங்குலும் பகலும் கண்துயிலறியாள் கண்ணநீர் கைகளாலிறைக்கும்* என்னும்படியான நிலைமையே பரதாழ்வானுடைய நிலைமையாதலால் அருவிசோருங் கண்ணீரைப் பெருக்கித் தரைக்கிடை கிடப்பதனால் சேறுபடிந்த மேனியனாகிறான். ஸ்ரீகுலசேகராழ்வார் * ஏறடர்த்தது மேனமாய் நிலங்கீண்டதும் * என்ற பாட்டில் * வண்பொன்னிப் பேராறு போல் வருங் கண்ணநீர்கொண்டு அரங்கன் கோயில் திருமுற்றம் சேறு செய் தொண்டர் * என்றருளிச் செய்திருக்கிறார். அப்பாசுரத்திற்கும் பங்கதிக்தঃ என்பதற்கும் ஒரு சேர்த்தியிருப்பதாகப் பூருவர்கள் திருவுள்ளம் பற்றுகிறார்கள். "கண்ணநீர் பங்கமாக" என்பது ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தி. நம்மாழ்வார்க்கு பரதாழ்வானோடு ஸாம்யம் நிர்வஹிக்குமிடம் அது. ... .... .... ... *

## 4. ஆத்மகுணங்களின் ஆவச்யகதை

அந்தணர் முதலிய நான்கு வருணத்தவர்களுக்கும் பற்பலவிதமான ஸம்ஸ்காரங்களும் தருமங்களும் நமது ஸநாதன தரும சாஸ்த்ரங்களில் வகுக்கப்பட்டிருக்கின்றன. சாஸ்த்ரவிதியை யனுஸரித்து அந்த ஸம்ஸ்காரங்களைப் பெற்று வர்ணாச்ரம தர்மங்களை அநுஷ்டித்து வருவதே போதுமானதென்று பலர் நினைக்கிறார்கள். ஆனால் நமது சாஸ்த்ரங்களின் கருத்தை ஆராய்ந்து பார்த்தால், மனிதர்கள் அவ்வளவோடு திருப்தி யடைவது கூடாதென்றும் இவற்றைவிட முக்கியமாய் ஸம்பாதிக்க வேண்டியவை வேறிருக்கின்றனவென்றும் கண்டுகொள்ளலாம். பரலோகத்தில் நாம் மஹத்தான நன்மையை அடைவதற்கும் இஹலோகத்தில் மேன்மை பெறுவதற்கும் இன்றியமையாத ஸாதனங்கள் ஆத்ம குணங்களேயாம்.

மஹர்ஷி கௌதமர் கூறுவதாவது, "அத அஷ்டௌ ஆத்மகுணாঃ; தயா ஸர்வபூதேஷு க்ஷாந்திঃ அநஸூயா சௌசம் அநாயாஸঃ மங்கலம் அகார்ப்பண்யம் அஸ்ப்ருஹா இதி. (21) யஸ்ய ஏதே சத்வாரிம்சத் ஸம்ஸ்காராঃ, ந ச அஷ்டௌ ஆத்மகுணாঃ ந ஸ ப்ரஹ்மணஸ் ஸாயுஜ்யம் ஸாலோக்யஞ்ச கச்சதி. (22) யஸ்ய து கலு ஸம்ஸ்காராணமேகதேசேபி அஷ்டௌ ஆத்மகுணாঃ, அத ஸ ப்ரஹ்மணஸ் ஸாயுஜ்யம் ஸலோகதாம் கச்சதி"—என்பதாக.

இதற்கு முன்னே நாற்பது ஸம்ஸ்காரங்களைக் கூறியிருக்கிறார். அந்த நாற்பதும் குறையறப் பெற்றிருந்தாலும் எவனுக்கு [மேலே விவரிக்கப் படுகின்ற] எட்டு ஆத்மகுணங்கள் இல்லையோ அவனுக்கு நற்கதி கிடையாதென்றும், அந்த நாற்பது

ஸம்ஸ்காரங்களுள் சில மாத்திரம் செய்யப்பெற்றிருந்தாலும் எவனுக்கு ஆத்மகுணங்களெட்டும் அமைந்திருக்கின்றவோ அவன் பரமபுருஷனுடைய ஸாயுஜ்யத்தையும் ஸாலோக்யத்தையும் அடைகிறானென்றும் உரைக்கிறார் மஹர்ஷி கௌதமர். இதனால் ஏற்படுவதென்ன? ஸம்ஸ்காரங்களே பிரதானமல்ல; ஆத்ம குணங்களே முக்கியமாய் நமக்கு வேண்டுமென்பதேயாம்.

அவ்வாத்ம குணங்கள் எட்டாவன : தயை க்ஷாந்தி அநஸூயை சௌசம் அநாயாஸம் மங்களம் அகார்ப்பண்யம் அஸ்ப்ருஹை என்பனவாம். இவற்றை அடைவே விவரிக்கின்றோம்.

தயையாவது : பிறருடைய துக்கத்தைக் கண்டு பொறுக்கமாட்டாமல் தாமும் துக்கப்படுகை யென்று சிலரும், பிறருடைய துக்கத்தைக்கண்டு ஸஹிக்கமாட்டாமை யென்று சிலரும், பிறருடைய துக்கத்தைப் போக்க விரும்புகை யென்று சிலரும் சொல்லுவர்கள். எதுவாயினுமாகுக. இவ்விதமான தயை எல்லாப் பிராணிகள் விஷயத்திலு மிருக்கவேணு மென்பதாக மஹர்ஷி கூறுகிறார்.

க்ஷாந்தியாவது : ஒருவன் நமக்குத் துன்பத்தை யுண்டுபண்ணினாலும் அவன் மீது கோபங்கொள்வதோ ப்ரதிக்ரியைசெய்ய ஆலோசிப்பதோ இவை யில்லாமலிருக்கையாகிற பொறுமை.

அநஸூயையாவது : பிறருடைய குணங்களை தோஷங்களாக வெளியிடாமலிருக்கை, குணசாலிகளிடத்தில் பகை பாராட்டாதிருத்தலுமாம்.

சௌசமாவது : உண்ணத்தகாதென்று சாஸ்திரங்களில் மறுக்கப்பட்ட வஸ்துக்களை உண்ணாமலிருக்கையும் துஷ்டர்களோடு ஸஹவாஸஞ் செய்யாமலிருக்கையும் தம்முடைய சாஸ்த்ரீயமான கடமைகளைச் செய்கையுமாம்.

அநாயாஸமாவது : சில காரியங்கள் தார்மிகமா யிருந்தாலும் அவற்றைச் செய்வதனால் ஆத்மபீடை ஏற்படக் கூடுமாயின் அதற்கு அஞ்சி அக்காரியங்களைச் செய்யா தொழிகை.

மங்களமாவது : மனதுக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கக் கூடிய மங்களகரமான காரியங்களையே செய்வது.

அகார்ப்பண்யமாவது ; கொடுக்கிறோமே யென்கிற வருத்தம் மனதிற் சிறிது மில்லாமல் ஒவ்வொருநாளும் சிறிதளவாவது தானம் பண்ணுவது. குடல் குழம்பும்படி எவ்வளவு கஷ்ட நிலைமை நேர்ந்த காலத்தும் நெஞ்சு தளராதிருத்தலுமாம்.

அஸ்ப்ருஹையாவது : கிரமமான வழியில் கிடைத்த வரையில் திருப்தியடைந்து பிறருடைய சொத்தில் ஆசை வையாமலிருக்கை.

இவ்வாத்ம குணங்களெட்டும் பொதுவாக எல்லா மனிதர்களுக்கும் வேண்டியதே. வைஷ்ணவர்களுக்கோ வெனில், இக்குணங்கள் மிகவும் முக்கியமானவையாம். இவ்விஷயம் நமது பூருவாசாரியர்களின் கிரந்தங்களில் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆத்ம குணங்களின்றிப் பஞ்ச ஸம்ஸ்காரங்கள் பெற்று பகவத் சரணாகதி செய்து விலக்ஷணமான பாஹ்ய வேஷத்தோடு கூடியிருந்தாலும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு நற்கதி கிடைப்பது அரிதே. இக்குணங்கள் கிட்டுவதும் அரிதே. எவ்வளவோ ஸாவதானமா யிருந்து விவேகத்தோடு நடந்து கொண்டாலும் இக்குணங்களை நிலைநிறுத்திக் கொள்வது கஷ்ட ஸாத்யமேயாம். ஆகவே ஒவ்வொருவரும் இதில் விசேஷமான முயற்சி யெடுத்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

## 5. திருக்குடந்தை யெம்பெருமான்.

ஆங்காங்கு விளங்கும் திவ்யதேசத் தெம்பெருமான்களுக்குப் பல் வேறு திருநாமங்கள வழங்கி வருகின்றன. அரங்கன் வேங்கடவன் பேரருளாளன் திருநாராயணன் அழகர் ஆதிநாதன் கேசவன் தாமோதரன் ஆமருவியப்பன் புருஷோத்தமன் கள்ளப்பிரான் என்றிப்படி நானுவிதமான திருநாமங்கள் நமது காதில் விழுகின்றன. எனினும் ஆராவமுது என்னும் திருநாமம் நமது காதில் விழும் போதும் நாவில் வரும்போதும் ஸத்யமாய் அமுதமுண்பதாகவே தோன்றுகிறது. ஆராவமுதன் என்கிற திருநாமத்திற் காட்டிலும் ஆராவமுது என்கிற திருநாமமே இன்சுவை மிக்கதாய்த் தோன்றுகிறது. இத்திருநாமத்தை வடமொழியில் அபர்யாப்தாம்ருதமென்று வழங்கி வருகிருர்கள். ஆனல் ஆராவமுதென்கிற சொல்லுக்கும் அந்த வடசொல்லுக்கும் ஒருவிதமான ஸம்பந்தமும் இல்லைபோலவே நெஞ்சு நினைக்கிறது. ஸம்பந்த மில்லாமலென்ன? நேரான மொழி பெயர்ப்புதான். ஆயினும், ஆராவமுதென்கிற சொல்லிலுண்டாகு மின்பத்தின் ஏகதேசமும் அதிலுண்டாவதில்லை.

திவ்ய தேசங்களில் எம்பெருமான்களுக்கு வழங்கும் திருநாமங்களைப் பற்றிச் சிலர் ஆராய்ச்சி செய்வதுண்டு; அநாதிகாலமாக வழங்கி வருகிற திருநாமங்களை ஆழ்வார்கள் தங்கள் திவ்யப் பிரபந்தங்களிலே எடுத்தாளுகின்ருர்களா? அல்லது, ஆழ்வார்களிட்ட திருநாமங்களைப் பின்புள்ளார் வழங்கிவரத் தொடங்கினர்களா? என்று. இவ்வாராய்ச்சியின் நேர்மையானமுடிவு எங்ஙனேயாயினுமாகுக. ஆராவமுது என்கிற திருநாமம் மாத்திரம் முதன் முதலாக நம்மாழ்வார் திருவாக்கில்தான் அவதரித்திருக்குமென்கிற நிச்சய ஞானம் நமக்குளது. இத் திருநாமத்தின் சுவையை யறிந்து ரஸிக்க வல்லார் மிகச் சிலரே.

நம்மிடத்தில் ஆராவமுது என்கிற ஒரு பையன் மாணுக்கனுக இருந்தான். ஒரு ஸமயம் அவனை அவனது தகப்பனுர் ஊருக்கழைத்துச் செல்வதற்காக வந்தார். அப்போது நாம் அவரிடத்தில் பேசிக் கொண்டிருக்கையில் "இவனுக்கு ஆராவமுது என்று பேர் வைத்திருக்கிறீரே; இவன் திருக்குடந்தையில் ஜனித்தானே?" என்று கேட்டோம். அதற்கு அவர் சொன்னுர்—'இல்லை யில்லை; இவன் ஆருவது பையனுகப் பிறந்தான்; அதனுல் (ஆருவது) என்று பெயர் வைத்தேன்' என்ருர். இவனுடைய சர்மன் என்ன? என்று கேட்டதற்கு ஸ்ரீநிவாஸ சர்மன் என்ருர். இதைக் கேட்டவுடனே நமக்குண்டான துக்கம் ஸத்யமாய் அளவு கடந்திருந்தது. திருக்குடந்தை யெம்பெருமானுடைய திருநாமத்தைக் கூட அவர் ஆருவது என்றே கிரஹித்திருக்கிருர். நாதன் கோவில் திருவிண்ணகர் புள்ளம் பூதங்குடி ஆதனூர் திருவெள்ளியங்குடி ஆகிய ஐந்து ஊர்களிற் காட்டில் ஆருவதான திருக்குடந்தையிலே யெழுந்தருளியிருக்கையாலே ஆருவது பெருமாள் என்பதாக அவருடைய கருத்தாம். இது நம்மாழ்வார் திருச் செவியில் விழுந்தால் அவர் என்ன பாடு படுவரோ அறியோம். .... .... .... .... *

## 6. எம்பெருமான் அல்பஸந்துஷ்டன்.

ஸத்யஸங்கல்பனுன எம்பெருமான் இங்கிலவுகில் அவதாரங்கள் செய்யாமலே தன்னுடைய ஸங்கல்ப சக்தியினுலேயே எதையும் செய்து தலைக்கட்டிவிட முடியும். * நாட்டில் பிறந்து படாதன பட்டு மனிசர்க்காய் * என்று நம்மாழ்வாரருளிச் செய்கிறபடி கர்மவச்யர்களான நம்போல் வாரும் படாத கஷ்டங்களை அகர்மவச்யனுன தான் பட்டு எதற்காக இங்கிலத்தில் வந்து பிறக்கவேணும்? எத்தனை அஸுர ராக்ஷஸர்களைக் கொல்லவேண்டுமானுலும் "விச்வம் தியைவ விரசய்ய நிசாய்ய பூயஸ் ஸஞ்ஜஹ்ருஷ:" என்று ஆழ்வானருளிச்செய்த கணக்கிலே ஸங்கல்ப மாத்ரத்தாலே அது

செய்யமுடியாதா? ஸாதுபரித்ராணம் எவ்வளவு பண்ண வேணுமானாலும் "நந்வஸ்தி விச்வபரிபாலந ஜாகரூகஸ் ஸங்கல்ப ஏவ பவதோ நிபுணஸ் ஸஹாய:" என்று தேசிக னருளிச் செய்கிறபடி ஸங்கல்பத்தாலே பண்ண முடியாதா? எதற்காக மனிசரும் மற்றும் முற்றுமாய் மாயப் பிறவி பிறந்து வருந்த வேண்டும்? என்று பலர் கேட்ப துண்டு. இதற்கு நம் பூருவாசாரியர்கள் ஆச்சரியமான ஸமாதானத்தை அருளிச் செய்தே யுள்ளார்கள். துஷ்க்ருத் விநாசநம் ஒருவாறு ஸங்கல்ப ஸாத்யமானாலும் ஸாது பரித்ராணம் ஸங்கல்ப ஸாத்ய மாகாதென்று ஸ்வாமி யெம்பெருமானார் ஸ்ரீ பாஷ்யத்தில் வ்யக்தமாக அருளிச் செய்துள்ளார். முடிவாகத் தேர்ந்த பொருள் யாதெனில், எம்பெருமான் ஸங்கல்ப சக்தியாலே செய்தருளு மளவில் ஸாது பரித் ராண துஷ்க்ருத் விநாசாதி ரூபங்களான காரியங்கள் ஒருவாறு நிறைவேறி விடு கின்றன வென்று கொண்டாலும் தன்னுடைய அற்புதமான திவ்ய கல்யாண குணங் களை வெளியிட ப்ராப்தமே யாகாது; திருக்கல்யாண குண ப்ரகாசனமே எம்பெரு மானுக்கு ப்ரதானமான உத்தேச்யம். அதனை ஸங்கல்பத்தால் நிறைவேற்றவே முடியாது. அதற்காகவே அவதாரங்கள் செய்து போருவது—என்பதே. இதையே பட்டர் "குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்" என்ற ஸ்ரீ ஸூக்தியினால் வெளியிட் டருளினர். நீர் நிரம்பின காலத்தில் ஏரிகளுக்குக் கலுங்கல் எடுத்து விடா விட்டால் எப்படி தரிப்பு அரிதோ, அப்படியே குணபுஷ்கலனான எம்பெருமானுக்கும் அவ தாரங்கள் செய்யாவிடில் குணங்களைக் கொண்டு தரிப்பு அரிது என்பது காட்டப் பட்டது. இது தோன்றவே ஸ்ரீராமாயணத்தின் ஆரம்பமே "கோந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந்" இத்யாதி குண ப்ரச்நமாகவே நிகழ்ந்திருக்கின்றது. ஸ்ரீ ராமாயணாதி இதிஹாஸ புராண ப்ரவசனம் செய்தருளும் மஹான்களும் கதா ஸந்தர்ப்பங்களில் முக்கியமான நோக்கு வையாதே ஆங்காங்கு ஆவிஷ்க்ருதமாகின்ற திருக்குணங்களிலேயே தாங்களுருகி ச்ரோதாக்களையும் உருக்குகின்றார்கள்.

* ராமராவணயோர் யுத்தம் ராம ராவணயோரிவ * என்னும்படி இராமனுக்கும் இராவணனுக்கும் ப்ரபல யுத்தம் நடந்ததென்று இதைப் பல ஸர்க்கங்களால் வான்மீகி முனிவர் பெருக்கிப் பேசினாலும் * பொல்லா வரக்கனைக் கிள்ளிக் களைந் தானை யென்று பேசலாம் படியான மஹாவீரன் ஒரு புழுவோடே போராடினதில் வியப்பார் ஆரேனு முளரோ? அந்த ஸந்தர்ப்பத்தில் "யோ வஜ்ர பாதாசநிஸம்நி பாதாந் ந சுக்ஷுபே நாபி சசால ராஜா, ஸ ராம பாணாபிஹதோ ப்ருசார்த்தச் சசால" என்னும்படி நிசாசரர் கோமான் நிலை கலங்கி நின்றபோது இன்று போய் நாளைவா" என்று பெருமாள் திருவுள்ளமிரங்கி விடைகொடுத்து விட்டாரே! இந்த திருக்குணம் என்னே என்னே! என்று இதற்கு உருகுகிறார்களே தவிர, சரமாரி பொழிந்த சேவகத்திற்கு உருகுவார் ஒருவருமிலரே. கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ் தவத்தில்—"யத்தாத்ருசாகஸமரிம் ரகுவீர! வீக்ஷ்ய விச்ரம்யதாமிதி மூமோசித" என்ற ச்லோகத்தினால் இந்தத் திருக்குணத்திற்கு உருகுந்திறம் மரங்களு மிரங்கும் வகையன்றோ அமைந்துளது. "கோயம் குண:! கதரகோடி கத:! கியாந் வா! கஸ்ய ஸ்துதே: பதம்! அஹோ பத கஸ்ய பூமி:!" என்றன்றோ உருகுகிறார். திருநாவீறுடைய பிரானான திருமங்கையாழ்வார் * சுரிகுழற் கனிவாய்த் திருவினைப் பிரித்த கொடுமையிற் கடுவிசையரக்கன் * என்னும்படி நின்ற மஹாபாபியான இராவணனை உடனே தொலைத்தொழித்துத் திரும்பவேண்டியிருக்க, "ரணார்தி தஸ் த்வம்" என்று திருவுள்ளத்தில் புண்பாடுகோட்டுவதும், ("ஆச்வாஸ்ய என்று) உடம்புக்குத் தேற்றரவுசெய்துகொள் என்பதும் வீட்டுக்குச் செல்ல விடை கொடுப் பதும் குணரஸிகர்களின் நெஞ்சை நீராயுருக்கக் கேட்க வேணுமோ?

ஸ்ரீராமாவதாரத்தில் காட்டின திருக்குணங்களிற் காட்டிலும் மிகச் சீரியவை க்ருஷ்ணாவதாரத்தில் காட்டின திருக்குணங்கள். நம்மாழ்வார் * பிறந்தவாறும் வளர்ந்தவாறும் * என்று சொல்லி ஆறுமாஸம் மோஹித்திருந்தது இவ்வவதாரத்திலே

யன்றே. க்ருஷ்ணாவதாரத்தில் எந்த கதா ஸந்தர்ப்பத்தை யெடுத்துக்கொண்டாலும் ஆச்சரியமான திருக்குணம் விளங்கியே தீரும். இளம்பிராயக் கதைகள் நிற்க. யௌவன பிராயக்கதைகளில் குசேல முனிவர் வந்து சேருங் காலத்துக் கதை மிக ரமணீயமானது. இது ஸ்ரீபாகவதம் தசமஸ்கந்தத்தில் 80, 81 அத்யாயங்களில் உள்ளது. குசேலோபாக்யானம் அறியாதாரில்லை, அனைவரு மறிந்ததே. குசேல முனிவரை நோக்கிக் கண்ணபிரான் கூறும் வார்த்தைகளில் ஒன்றையே இங்கெடுத்துக்கொண்டு ரஸாநுபவம் செய்ய விரும்புகிறேம்.

கண்ணனைக் காணச் சென்ற குசேலர் கையில் அவல் கொண்டுபோயிருக்கிறார், அதுவும் அவருடைய கந்தைத் துணியில் தங்காமல் கொட்டிப்போய்ச் சில கணங்களே தங்கியிருக்கலாயிற்று. அதையும் கொடுக்க லஜ்ஜித்திருக்கிறார். கண்ணபிரானே "கிமுபாயநமாநீதம் ப்ரஹ்மந் மே பவதோ க்ருஹாத்"—ஐயா! உம் அகத்திலிருந்து எனக்கு என்ன உபஹாரம் கொணர்ந்தீர்? என்று மடி பிடித்துக் கேட்கிறான். இன்னது கொணர்ந்தேனென்று கூறுவதற்கு நா எழும்பவில்லை. கொணர்ந்த அற்ப வஸ்துவை என்னவென்று கூறுவது! என்னவென்று கொடுப்பது! என்று தடுமாறி நிற்கிறார் பாவம்! அந்த ஸங்கோசத்தையறிந்துகொண்ட கண்ணபிரான் அப்போது கூறுகின்றான்—

"அண்வப்யுபாஹ்ருதம் பக்தைः ப்ரேம்ணா பூர்யேவ மே பவேத், பூர்யப்யபக்தோபஹ்ருதம் ந மே தோஷாய கல்பதே" என்று. பக்திமான்கள் அணுவளவு இட்டாலும் அது அன்பின் கனத்தாலே என் புத்திக்கு மிகப் பெரிதாகவே தோற்றும்; அன்பிலாதார் மிகக் கனக்க இட்டாலும் அதனால் நெஞ்சு கனியேன்—என்பது இந்த ச்லோகத்தின் பொருள். இதனால், பகவான் பக்தர்களிடத்துக் கடுகையும் மலையாகக் கொள்ளுமியல்வினன் என்பது பெறப்படும்.

கீதையில் ஒன்பதாமத்தியாயத்தில் கூறியுள்ள "பத்ரம் புஷ்பம் பலம் தோயம்" என்ற ச்லோகமும் இந்த ப்ரகரணத்தில் கண்ணனால் பூர்த்தியாகக் கூறப்பட்டிருக்கின்றது. அந்த ச்லோகத்தின் கடைசிபாதம் 'அச்நாமி ப்ரயதாத்மநः' என்பது. இவ்விடத்து கீதாபாஷ்யத்தில் எம்பெருமானார் அருளிச்செய்வதாவது—"மநோரதபதததூரவர்த்தி ப்ரியம் ப்ராப்யேவ அச்நாமி" என்று. அவாப்த ஸமஸ்தகாமனான எனக்கும் கிடைக்கமாட்டாததானவொரு பெரிய ப்ரியவஸ்து கிடைத்தாற்போல் அநுபவிக்கிறேனென்று எம்பெருமான் சொல்லுவதாக பாஷ்யமுள்ளது. ஸம்ஸ்க்ருதஜ்ஞர்கள் அவ்விடத்து பாஷ்யபங்க்தியை யெடுத்து ஸேவித்தால் கண்ணநீரைப் பெருக்காமலிருக்க முடியாது. அணுவையும் அபரிமிதமாகக் கொள்ளும் பரிசு தனக்குள்ளதென்பதைக் கண்ணபிரான் இங்கு [குசேல கதையில்] மேலே வெகு ரஸமாகக் காட்டுகிறான். குசேலரை நோக்கிக் கண்ணன் இங்ஙனே சொல்லச் செய்தேயும் அவர் வெட்கத்தினால் அவலைக் கொடுக்கவேயில்லை. கண்ணன் தானாகவே அவருடைய சதச்சித்ரமான உத்தரீய முடிப்பைப் பிடித்திழுக்க, சில அவல் துளிகளே கைப்பட்டனவாம். ஆனாலும் "அண்வபி பூர்யேவ மே பவேத்" என்று கீழே சொன்னது ப்ரத்யக்ஷமாக வேணுமே; அதற்காக, அந்த அவல் கணங்களும் கண்ணன் கைப்பற்றினவாறே முஷ்டியளவாக ஆயிற்றாம். அதை அமுது செய்ய, அவ்வளவிலும் அது ஓய்ந்ததில்லை; மற்றொரு முஷ்டியாகவும் பெருகிற்றாம். இவ்விசயம் (ஸ்ரீபாகவதத்தில்) "இதி முஷ்டிம் ஸக்ருஜ் ஜக்த்வா த்விதீயம் முஷ்டிமாததே." என்பதனால் தெரிவிக்கப்படுகிறது.

எவ்வளவு இட்டாலும் த்ருப்தி யடையாதே 'என்ன கொடுத்தாய், உன்னைப் போன்ற க்ருபண சிரோமணியும் உலகிலுண்டோ?' என்று தூற்றும் நம்போல்வாரைப் போலன்றியே அல்பஸந்துஷ்டன் எம்பெருமான்—என்னும் இம்மஹா

குணத்தை எம்பெருமான் தன்னுடைய உக்திகளாலும் நடத்தைகளாலும் விளங்கக் காட்டிக்கொண்டிருப்பதை அஸூயையின்றிக்கே அநுபவிக்கும் குடியிலே ஜன்மாந்தர ஸஹஸ்ர நற்றவப்பயனாக நாம் பிறந்திருக்கிறோம். இத்தகைய மஹா குணத்தை ஒருவர் எடுத்துரைத்தால் "கேசவனைப் பாடவும் நீ கேட்டேகிடத்தியோ" என்கிறபடியே ஆனந்தமாகக் கேட்டுக்கொண்டிருக்க வேண்டுவது பக்தியுக்தர்களின் லக்ஷணம். பகவத் குணங்களைக் கேட்கக் கேட்க நீர்ப்பண்டமா யுருகவேணும்.

கண்ணபிரான் அர்ஜுநனுக்கு கீதை முழுவதும் உபதேசித்து விட்டு முடிவில் "இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசந, ந சாசுச்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோப்யஸூயதி" = நான் உனக்குச் சொன்ன இந்த பரமகுஹ்யமான சாஸ்த்ரத்தை அதபஸ்கனுக்குச் சொல்லாதே, அபக்தனுக்குச் சொல்லாதே, அசுச்ரூஷுவுக்குச் சொல்லாதே, என்னிடத்தில் அஸூயை யுள்ளவனுக்குச் சொல்லாதே யென்று கட்டளையிடுகிறான்; இங்கு "ந ச மாம் யோப்யஸூயதி" என்ற விடத்திற்கு நம் பாஷ்யகாரர் பாஷ்யமிட்டருளுகிறார்; காணக் கண்ணாயிரம் வேண்டும்; கேட்கக் காதாயிரம் வேண்டும்; நவில நாவாயிரம் வேண்டும்; "மத்ஸ்வரூபே மதைச்வர்யே மத்குணேஷு ச கதிதேஷு யோ தோஷமாவிஷ்கரோதி, ந தஸ்மை வாச்யம்" என்று பாஷ்யஸூக்தியுள்ளது. என்னுடைய ஸ்வரூபத்தையும் என்னுடைய ஐச்வர்யத்தையும் என்னுடைய குணங்களையும் ஒருவர் எடுத்துரைத்தால் அவற்றில் தோஷாவிஷ்கரணம் செய்பவனே என்னிடத்தில் அஸூயை கொண்டவன்; அவனுக்கு நீ ஒன்றும் சொல்லாதே. என்று கண்ணபிரான் கட்டளை யிடுவதாக ஸ்வாமி பாஷ்யம் செய்தருளுகிறார். பகவத் குண கீர்த்தனம் பண்ணினால் அதில் தோஷாவிஷ்கரணம் செய்பவர்யார்? "கேட்பார் செவி சுடு கீழ்மை வசவுகளே வையும் சேட்பால் பழம் பகைவன் சிசுபாலன்" என்று நம்மாழ்வாரால் விசேஷிக்கப்பெற்ற சிசுபாலன் போல்வார்—என்று இதுவரையில் எண்ணியிருந்தோம். அது தவறு; எம்பெருமானார் தர்சனத்திலேயே ஜனித்து, எம்பெருமானை அநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாண குணைகதாநனென்றும் இசைந்துவைத்து,

> "நம் போல்வாரிடத்து நமஃ என்கிற உக்திமாத்ர முண்டானாலும்
> அது எம்பெருமானுக்கு ப்ரீயிஷ்டமாகிறது"

என்று இந்த மஹா குணத்தைச் சொன்னவாறே கண்கள் சிவந்து தாபம் மிகுந்து வாதயுத்த ஸந்நத்தர்களாகின்றார்களே சில மஹாநுபாவர்கள். அவர்களே * மத்குணேஷு கதிதேஷு தோஷமாவிஷ்கரோதி யென்ற எம்பெருமானார் திவ்ய ஸூக்திக்கு இலக்கானவர்களென்று, திண்ணமாக எண்ணத்தட்டுண்டோ?

* பூயிஷ்டாம் தே நம உக்திம் விதேம * என்கிற வாக்யம் ஈசாவாஸ்யாதிகளான உபநிஷத்துக்களிலும் உள்ளதாகையாலும் தேசிகாதிகளால் பகவத்பரமாகவே வ்யாக்க்யாதமாகையாலும் இது எம்பெருமானைப் பற்றியதன்றென்று வாய் திறக்க வழியில்லை. 'தே பூயிஷ்டாம் நம உக்திம்' என்று அந்வயித்து, நமஃ என்கிற உக்தி மாத்ரமும் அவன் திருவுள்ளத்தாலே கனத்ததாகிறது என்று அர்த்தம் செய்தால் இது எம்பெருமானுக்குப் பொருந்தாத குணமென்று சொல்லமுடியுமா? சப்தசக்தியால் லப்யமாகாது என்னத்தான் முடியுமா? எதுவும் முடியாது.

"அண்வபி பூர்யேவ மே பவேத்" என்னு மெம்பெருமானுடைய திருவுள்ளத்திற்கும் இயல்பிற்கும் மிக இணங்கினதாய் பகவத் குணாதிசய குதூஹலிகளுக்குப் பரமானந்த ஸந்தோஹ ஸந்தாயகமாய் சப்தஸ்வரஸதஃ ப்ராப்தமுமாயிருக்கின்ற இந்த மஹார்த்தத்தை—நம்பிள்ளை ஸ்ரீ ஸூக்திகளுள் மஹாநிதியான அர்த்தத்தை நம்பிள்ளையைப்போற்றும் குடியிலுள்ளாரும் ரஸிக்கமாட்டிற்றிலரந்தோ; ... *

## 7. "விதுராந்நாநி புபுஜே"

பாண்டவர்க்காய்த் தூதுசென்ற கண்ணபிரான் விதுரர் திருமாளிகையிலே புக்கவாறே "முன்னமே துயின்றருளிய முதுபயோததியோ, பன்னகாதிபப் பாயலோ பச்சையாலிலையோ! சொன்ன நால்வகைச் சுருதியோ கருதி நீ யெய்தற்கு, என்ன மாதவம் செய்ததிச் சிறுகுடிலென்றான்" (வில்லிபாரதம்) என்றபடி பலவிதமாக நைச்யாநுஸந்தானம் செய்து விதுரர் கண்ணனுக்கு ஏதோவுண்ணக் கொடுத்தார்; கண்ணனும் அதனைப் பரமானந்தமாகவுண் டான் என்று உலகம் சொல்லிவருகிறது. இவ்விடத்தை மஹா பாரதத்தில் எழுதுகின்ற வ்யாஸபகவான் எங்ஙனே யெழுதினனென்று சிறிது பார்ப்போம். விதுரர் அன்னமிட்டாரென்பதைச் சொல்லுமிடத்து "விதுரோந்நமுபாஹரத்' என்றார் வியாஸர்; கண்ணன் அதனையமுது செய்தானென்பதைச் சொல்லுமிடத்து 'விதுராந்நாநி புபுஜே சுசீநி குணவந்தி ச" என்றார். "அப்திர் லங்கித ஏவ வாநர படை:" என்ற ரீதியிலே நின்று புராணப்ரஸங்கம் செய்து போருமவர்கள் 'விதுரர் அன்னமிட்டார்; அது பரம பரிசுத்தமாயும் பரம போக்யமாயு மிருந்த படியாலே அதனைக் கண்ணனமுது செய்தான்' என்றிவ்வளவே சொல்லிப் போருவர்கள். விதுரர் அன்னமிட்டாரென்பதைச் சொல்லும்போது "அந்நம் உபாஹரத்" என்று ஏகவசநப்ரயோகம் செய்த முனிவர் உடனே கண்ணனமுது செய்ததைச் சொல்லு மிடத்து 'அந்நாநி புபுஜே' என்று பஹுவசநப்ரயோகம் செய்ததேன்? என்று ஆராய்ந்து நிதியெடுத்து ஊட்டவல்லவர்கள் மிகச் சிலரே. விதுரர் அன்னமிட்ட போது அது மிகவும் அல்பமாயிருந்ததென்பதைக் காட்ட அங்கு ஏகவசநப்ரயோகம் பண்ணினர். அது தானே "அண்வபி ப்ரேம்ணா பூர்யேவ மே பவேத்" என்ற கண்ண பிரானுடைய திருக்கைத்தலத்தில் சேர்ந்தவாறே அநல்பமாய் விட்டதென்பதைக் காட்ட அங்கு 'அந்நாநி புபுஜே' என்று பஹுவசநப்ரயோகம் பண்ணினர்—என்று மருமமறிந்து எடுத்துரைக்க வல்லவர்கள் யாராயிருக்க வேண்டும்? பகவத் குணஸா கரத்தில் நன்கு படிந்தவர்களாய் பகவானுடைய விசேஷ கடாக்ஷத்திற்குப் பாத்ர பூதர்களாய் அவனுடைய திருக்குணங்களையே ஜ்வரஸந்நிபதிதரைப் போலே வாய் வெருவுமவர்களாயிருக்கவேண்டும்.

"இக்கருத்தையுட்கொண்டு தான் வியாஸர் சுலோகமியற்றினரோ? ஏதோ ச்லோகம் கூடுகிறபடி சொல்லிவைத்தார்; அதற்கு இப்படி விசேஷார்த்தம் சொல்லு வது குஷ்டை" என்று ஸஹஸா சொல்லிவிட வல்லவர்கள் எங்கும் பரம்பியுள்ளார் களென்பதை நாமறிவோம். 'விதுரோந்நமுபாஹரத்' என்றதற்குப் பொருந்த 'புபுஜே விதுராந்நம் தத்' என்று ச்லோகமியற்ற அருமையில்லை. "ஜாமாதா வேத்தி நோ பிதா........வ்யாக்யாதா வேத்தி நோ கவி:" என்ற கணக்கிலே வ்யாஸர் இவ் விசேஷப்பொருளைக் கருதிற்றிலர் என்றே கொண்டாலும் இந்த இன்சுவைப் பொருளைக் கொள்ளக் குறைவில்லாதபடியன்றோ வசநஸந்தர்ப்பம் அமைந்திருக் கின்றது. பகவானுடைய ஆச்சரியமான குணவிசேஷமன்றோ குன்றிலிட்ட விளக் காகின்றது இப்பொருட்சுவையில்.

"கண்காணநிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற் றாதபடிநின்று" (ஸ்ரீ வசநபூஷணம்) என்கிறபடியே கட்கிலியான எம்பெருமானை நாம் ஸாக்ஷாத்கரித்து அநுபவித்து ஆனந்திக்க பாக்கியம் பண்ணிற்றிலோம். "கோவிந்தன் குணம்பாடி ஆவிகாத்திருப்பேனே" என்று ஆண்டாளருளிச் செய்த கட்டளையிலே குணாநுபவம் பண்ணிப் போதுபோக்க நிற்கிறோம் மத்தனை. இந்த குணகீர்த்தனமும் எம்பெருமானார் தர்சனஸ்தர்களுக்கும் அஸஹ்யமாகிறதென்றால் இதனில் மிக்கோர் வியப்புண்டே? பக்தனிட்ட அல்பமான அன்னம் ஸ்வீகர்த்தாவின் திருவுள்ளத்தால் அநல்பமாயிற்று என்று ஒரு குணரஸிகர் உபந்யஸித்தால் இதில்

அநுபபத்திகளைக்கூற வழிதேடுவாருமுளரே? *தே பூயிஷ்டாம் நமஉக்திம்* என்பதைப் பழிக்கப்பார்க்குமவர்கள் இங்கு வாளாவிருப்பர்களோ? 'நாம் கனக்க இட்டாலுங் கூட அதில் குற்றங்குறைகண்டு தள்ளுகிறவனன்றோ பகவான்' என்பதையே ரஸகரமான பொருளாகக்கொண்டு இதனையே சிஷ்ய கோஷ்டிகளுக்கு ப்ரவசனம் செய்து க்ருதக்ருத்யராமவர்களை நிரோதிப்பாராருமிலரே. .... .... *

## 8. ஜ்ஞானபக்திகளின் மருமம்.

உலகில் காணும் மஹான்களை நாம் இரண்டு வகுப்பில் சேர்த்துப் பேசுகின்றோம். சிலரை மஹாஜ்ஞானிகள் [மஹா பண்டிதர்கள்] என்று வழங்குகிறோம். சிலரை மஹாபக்தர்களென்று புகழ்கிறோம். பாண்டித்யமும் பரம பக்தியும் ஒரே நபரிடத்தில் ஒன்று சேர்ந்திருக்க முடியாத தன்மைகளல்ல. இருளும் ஒளியும் ஒன்று சேர்ந்திருக்கமாட்டாதவை யென்பது போல இந்த ஜ்ஞானபக்திகளும் ஒன்று சேர்ந்திருக்க மாட்டாதவை யென்பாரில்லை. நம்முடைய பூர்வாசாரியர்களும் மற்றும் பல பெரியார்களும் ஜ்ஞான பக்தி விரக்தி நிதிகளாயிருந்தவர்களே. ஆனால் இக்காலத்தில் இவற்றை நாம் ஏகாச்ரயத்தில் காண்பது அரிதேயாகின்றது. ஞானமுள்ள விடத்தில் பக்தியையும், அநுஷ்டானத்தையும் காண முடிகிறதில்லை. இவை காணுமிடங்களில் ஞானத்தைக் காண்பது அரிதாகின்றது.

உலகில் ஜ்ஞாதாக்களுக்கு கௌரவம் அதிகமா? பக்திமான்களுக்கு கௌரவம் அதிகமா? என்று நாம் பார்த்தால், உண்மையில் பக்திமான்களுக்குத்தான் கௌரவம் அதிகமாக இருக்கவேண்டும்; ஆனால் ஜ்ஞாதாக்களுக்கே அதிகமான கௌரவம் ஆங்காங்கு செய்யக் காண்கிறோம். இதற்குக் காரணமென்ன வென்றால் இவர்கள் போலிபக்தர்களா? உண்மை பக்தர்களா? என்று யதார்த்தமாகக் கண்டு பிடிக்க முடிகிறதில்லை. வித்வான்களென்கிற வகுப்பிலும் உண்மை வித்வான்கள் போலி வித்வான்களென்கிற வேற்றுமை யிருந்தாலும் வாயிலிருந்து வெளிவரும் பேச்சுக்களைக் கொண்டு இன்னார் உண்மைப்பண்டிதர், இன்னார் போலிப்பண்டிதர் என்று தெரிந்துகொள்ள முடிகிறது. பக்திமான்களை இங்ஙனே தெரிந்து கொள்வது முடியாத காரியமாக இருக்கின்றது.

பக்தனென்று வெளிக்குக் காட்டிக்கொள்ளக் கூடிய வேஷபூஷணங்களைத் தரித்துக் கொள்வது அனைவர்க்கு மெளிதாகின்றது. உள் கனிந்த உண்மையான பக்தி பிறப்பது மிகவும் அரிதாயிருக்கின்றது. பன்னிரண்டு திருமண் காப்புகளை அழகாயும் ப்ரகாசமாயும் தரித்துத் திருமணித் தாவடம் திருப்பவித்திரம் முதலியன பூண்டு கொண்டு பாகவதோத்தம னென்று உலகமடங்கலும் உகந்து கொள்ளும்படியான வேஷத்தோடு வெளிவருவதில் விசேஷ ச்ரமமில்லை. இதுபோலவே முடி முதல் அடிவரையில் திருநீறு பூசி ருத்ராக்ஷ மாலையணிந்து சிவ பக்தசிகாமணியாக விளங்குவதிலும் தாமத மேற்படாது. ஆனால் மனத்தில் அழுந்திக் கிடக்கும் பாப வாஸனைகளை அகற்றிப் பரமேச்வரனிடத்தில் உண்மையான அன்பு கொண்டு தன்மயபாவத்தை யடைவதொன்றே கஷ்ட ஸாத்யமும் கால விளம்பத்தில் அருமையாய்ப் பெறக்கூடியதுமாம்.

பக்தியின் வெளிவேஷங்களை வஹித்துக் கொள்வதனால் மாத்திரம் ஒருவன் உண்மையான பக்தனாக ஆய்விடமாட்டான். அநாதிகால ஸஞ்சிதமான பாபங்கள் கழிந்து துர்வாஸனைகள் தொலைந்து பரமபுருஷ விஷயத்தில் பரவசமான பக்தி ஏற்பட்டுத் தன்மயமாய்ப் போனால்தான் பக்தனாக முடியுமென்பதை ஒவ்வொருவரும் மனத்தில் அழுத்தவேண்டும். பக்தியின் வெளிச்சின்னங்கள் அவசியமில்லையென்று நாம் சொல்லுகின்றிலோம். அவை மிகவும் அவசியமே யென்பதைப்பற்றி முன்

ஒரு வியாஸம் விரிவாக எழுதி வெளியிட்டிருக்கின்றோம். அந்த வெளிச்சின்னங் களைத் தரித்துக்கொள்வதனுல் மாத்திரம் த்ருப்தியடைந்து விடாமல் உண்மையான பக்திக்கு முயற்சி செய்யவேண்டும்.

பெரும் பெருந் தருமகாரியங்களைச் செய்கிறவனே பக்தன் என்று சிலர் நினைக்கக்கூடும். குளம் வெட்டுவிப்பது, சத்திரம் சாவடிகள் கட்டுவிப்பது, தண்ணீர்ப் பந்தல் வைப்பது இவைபோன்ற பல வெளிப்பகட்டான காரியங்கள் செய்கிறவன் பக்தன் எனச் சிலர் நினைக்கிறார்கள். உண்மையுரைக்குங்கால் இக்காரியங்கள் ஒருவிதத்திற் சிறந்தவைகளே யாகிலும் இவ்வகைக் காரியங்கள் செய்வதனுலேயே ஒருவன் பக்தனென்னும் வ்யபதேசத்திற்குப் பூர்ணபாத்திரமாய் விடமாட்டான். இவ்விதமான பெருங்காரியங்கள் செய்ய அனைவர்க்கும் இயலாது. யாரோ சிலர்தான் இவற்றைச் செய்யக்கூடும். அங்ஙனம் செய்பவர்களை விசேஷ தனிகர்களென்றும் விசாலமனம் படைத்தவர்களென்றும் சொல்லலாமே யல்லது பக்தர்களென்று சொல்லுவதற்கில்லை.

ஆனுல் உண்மையான பக்தனுடைய அடையாளமென்ன வென்று கேள்வி பிறக்கலாம். உண்மையான பக்தனைக்காண்பது அரிதேயாகிலும் கண்டு பிடிப்பது கஷ்டமல்ல. எம்பெருமானிடத்தில் சுயநன்மை கருதாத அன்புடைய பக்தனிடத்தில் ஒவ்வொரு ஸமயத்திலும் நாம் விசேஷத்தைக் காணலாம். எந்த காலத்திலும், எந்த தேசத்திலும் எந்த நிலைமையிலும் பக்தன் பக்தனுகவே யிருப்பான். நீராடுவது உண்பது முதலிய காரியங்களைச் செய்யும் போதும், பந்து மித்திரர்களோடு பழகும் போதும், பிணியால் வருந்தும் போதும், பலவகைக் கஷ்டநஷ்டங்கள் ஏற்படும் போதும், விசேஷமான லாபங்கள் கிடைக்கும்போதும் பக்தன் பக்தனுகவே யிருப் பான். எல்லாக் கால தேச நிலைமைகளிலும் ஸாதாரணமான நிலைமை மாறுமலே அவனிருப்பான். எவ்விதமான கொந்தளிப்பும் அவனிடத்திற் காணமுடியாது. எப் பொழுதும் இயற்கையான ஸந்தோஷத்தோடு சாந்தமூர்த்தியாக இருப்பான். எவ் விதமான மாறுபாடும் அவனிடத்திற் காண முடியாது. மஹத்தான ஆபத்துக்களி லும் தன்னிலைமையிலிருந்து பிறழமாட்டான். பொறுமையும் தயையும் சாந்தியும் பரிசுத்தியும் இன்னும் இது போன்ற பல நற்குணங்களும் அவனிடத்திற் பதிந்து கிடக்கும். பக்தியின் நிலைமை முதிரமுதிர இக்குணங்கள் வளர்ந்துகொண்டே வரும்.

எவன் தனது கடமைகளைக் குறையறச் செய்கிறுனே, மஹத்தான ஆபத்துக் கள் மிடைந்தபோதும் அக்கடமைகளைச் செய்வதில் மயிரிழையும் பிசகுகிறு னில்லையோ, தான் பிறர் சுற்றத்தார் மற்றையோர் மித்திரன் சத்துரு என்கிற பேத பாவனையின்றி அனைவரிடத்தும் ஒருபடியாக நடந்து கொள்ளுகிறுனே, உள்ளும் புறமுமொத்த சுத்தனுய் நேரான நெறியில் நிலைநிற்கிறுனே, எம்பெருமானிடத்தில் அகங்குழைந்த அன்புடையவனே அவனே, உண்மையான பக்தனுவான். பாலையும் நீரையும் பகுத்திடும் அன்னம் போல் அத்தகைய பக்தர்களை அநாயாஸமாகக் கண் டறிவர் பெரியோர். .... ... ... .... ... *

## 9. கீதாசாஸ்த்ரத்தின் சில நுட்பங்கள்.

கீதாசாஸ்த்ரமானது அர்ஜுனனுக்கும் கண்ணபிரானுக்கும் ஸம்வாத ரூபமாக அவதரித்திருக்கச்செய்தேயும் த்ருதராஷ்ட்ரனுக்கும் ஸஞ்ஜயனுக்கும் ஸம்வாதரூபமாகவும் அவதரித்ததாயிற்று. கீதை தொடங்கும்போதே "த்ருதராஷ்ட்ர உவாச" என்று அவன் பெயரைத்தான் நினைக்கவும் சொல்லவும் ப்ராப்தமாகிறது. த்ருதராஷ்ட்ரன் ஸஞ்சயனை நோக்கிக்கேட்க, குருக்ஷேத்திரத்தில் நடந்த செய்திகளை யெல்லாம் அவனுக்கு ஸஞ்சயன் சொல்வதாகவும், கீதாசாஸ்த்ரமும் ஸஞ்சயன் வாயி லாகவே வெளிவருதாகவும் அமைந்திருக்கின்றது. பதினெட்டாமத்தியாயத்தில்

எழுபத்து மூன்ருவது ச்லோகத்தோடு க்ருஷ்ணர்ஜுநஸம்வாதம் முடிந்து விட்டது. அதற்குமேலுள்ள ஐந்து ச்லோகங்களும் த்ருதராஷ்ட்ரனுக்கு ஸஞ்ஜயன் சொல்லி முடிப்பதாக அமைந்திருக்கின்றன.

பாண்டவர்களும் கௌரவர்களுமாகிற இருவகுப்பினருடையவும் சேனைகள் போர்புரிய ஆயத்தமாயிருந்த வளவில் வேதவ்யாஸ பகவான் தன் புதல்வனை த்ருதராஷ்ட்ரனிடம் வந்து 'மன்னவனே! இனி நடக்கப்போகிற யுத்தத்தில் உனது புத்திரர்கள் தவருது விநாசமடையப் போகிருர்கள்; அந்த யுத்தத்தை நீ நேரில் காண விரும்புகின்ருயாகில் அதைக் காண்பதற்கீடான சக்ஷுஸ்ஸை உனக்கு அளிப்பேன்' என்ருர். அதுகேட்ட த்ருதராஷ்ட்ரன் 'நான் அதைக் காண விரும்புகின்றிலேன்; உள்ளபடி அனைத்தையும் கேட்பிக்கவேணும்' என்ருன். அப்போது வேதவ்யாஸர் தம்முடைய சிஷ்யனும் த்ருதராஷ்ட்ர ஸாரதியுமான ஸஞ்ஜயனை யழைத்து யுத்தவிஷயத்தில் அவன் ஸர்வஜ்ஞனும்படி அநுக்ரஹம் செய்து, 'ஆதியோடந்தமாக யுத்த விருத்தாந்தங்கள் முழுவதையும் த்ருதராஷ்ட்ரனுக்கு நீ சொல்லக் கடவாய்' என்று நியமித்து (வியாஸர்) தம் இருப்பிடம் சென்று சேர்ந்தார். பிறகு ஸஞ்ஜயன் யுத்தரங்கத்தில் வந்து, அர்ஜுநனுக்கு கீதோபதேசம் செய்தருளா நின்ற ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மாவின் முகாரவிந்தத்தில் நின்றும் கீதாம்ருதத்தை ஸாக்ஷாத்தாக ச்ரவணம் பண்ணி வியாஸருடைய அநுக்ரஹத்தினல் கிடைத்திருந்த திவ்யஜ்ஞானத்தாலே விவித விசித்ர யுத்த விருத்தாந்தங்களெல்லாவற்றையும் தனக்கோர் அபாயமின்றிக்கே கரதலாமலகமாகக் கண்டுணர்ந்து அந்த யுத்தரங்கத்தில் நின்றும் போய் த்ருதராஷ்ட்ரனிடம் சேர்ந்து, யுத்தத்தைப்பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்த அவனுக்கு யுத்தச்செய்திகளை முதலே பிடித்துச் சொன்னன். ஆக இந்த ஸம்வாதம் கீதாசாஸ்த்ரமாக உலகில் பரவி அனைவரையும் புனிதமாக்கிக்கொண்டு வருகின்றது.

ஸ்ரீ க்ருஷ்ணபரமாத்மா வாஸ்தவமாகத் திருவவதாரம் செய்து, வாஸ்தவமான அர்த்தங்களை நிரப்பி வாஸ்தவமாக கீதாசாஸ்த்ரத்தை யவதரிப்பித்தருளினதாக ஸ்ரீ பகவத் ராமாநுஜனடியார்களான நாம் நம்பியிருக்கிறேம். ஸ்வாமியிட்டருளின கீதாபாஷ்யத்தின் அவதாரிகையிலும் மேலே பலச்லோகங்களின் பாஷ்யத்திலும் இந்த நம்பிக்கையே நமக்கு ஊர்ஜிதமாக்கப்படுகின்றது. ஆதிசங்கராசார்யஸ்வாமிகளியற்றிய பாஷ்யத்தின் ப்ரக்ரியை இதற்கு மாருகவுள்ளது. அவர் தம்முடைய பாஷ்ய அவதாரிகையில் "பகவாந்.. ஸ்வமாயயா தேஹவாநிவ ஜாத இவ ச லோகாநுக்ரஹம் குர்வந் லக்ஷ்யதே" என்றெழுதிவைத்திருக்கக் காண்கிறேம். இதனல், பகவான் உண்மையில் தேஹபரிக்ரஹம் செய்தருளவில்லையென்றும், உண்மையான அவதாரம் செய்தருளவில்லையென்றும், மாயையினல் ஏதோ ஜனங்களை மயக்கிக் காட்டினதாகவும் சங்கராசாரியர் அபிப்ராயப் படுவதாக விளங்குகின்றது; இப்படி இவர் அபிப்ராயப்படுவதற்கு ஒரு காரணபாஸ முண்டு; அதாவதென்னென்னில்; மேலே நான்காமத்யாயத்திலே பகவான் தானே தன்னுடைய அவதாரத்தைப்பற்றிப் பேசி வருகையில் (4-6) "அஜோபிஸந் அவ்யயாத்மா" இத்யாதி சுலோகத்தில் 'ஆத்மமாயயா ஸம்பவாமி' என்றுள்ளது. இதற்கு உண்மையான பொருள் எதுவோ அது பகவத் ராமாநுஜ பாஷ்யத்தில் ப்ரமாண ப்ரதர்சந புரஸ்ஸரமாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. "ஆத்மமாயயா — ஆத்மீயயா மாயயா. * மாயா வயுநம் ஜ்ஞாநம் * இதி ஜ்ஞாநபர்யாயோத்ர மாயாசப்த:. அபியுக்தப்ரயோக:— 'மாயயா ஸததம் வேத்தி ப்ராணிநாஞ்ச சுபாசுபம்' இதி. ஆத்மீயேநஜ்ஞாநேந — ஆத்மஸங்கல்பேந இத்யர்த்த:." என்பன கீதாபாஷ்யத்தில் அங்கு ஸ்வாமியருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்திகள். வைதிகநிகண்டுவையும் அதையநுஸரித்த அபியுக்த ப்ரயோகத்தையும் காட்டி ஸங்கல்பரூபஜ்ஞானமே இங்கு மாயா சப்தார்த்த மென்று ஸ்வாமி நிர்ணயித்திருக்

கிருர். இதுதான் மஹர்ஷிகளின் அபிப்ராயத்திற்கு மிகவுமிணங்கிய ப்ராமாணிக மான பொருள். ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் (6-5-84)*இச்சாக்ருஹீதாபிமதோரு தேஹ:* என்று, மாயாசப்தஸ்தானத்தில் இச்சாசப்தத்தை நிஸ்ஸந்தேஹமாக இட்டு, பக வான் தன்னுடைய இச்சையினுலே தனக்கு அபிமதமான பல திவ்யமங்கல விக்ரஹங் களைப் பரிக்ரஹித்துக்கொண்டு அவதரிப்பதாகச் சொல்லப்பட்டுள்ளது.

இங்கு சங்கராசார்யர் "ஸம்பவாமி—தேஹவாநிவ பவாமி; ஜாத இவ, ஆத்ம மாயயா, நபரமார்த்தத:; லோகவத்" என்று எழுதியுள்ளார். கானலானது தன் னிடத்தில் தண்ணீர் இல்லாமலிருக்கச் செய்தேயும் அது இருப்பதுபோல் காட்டுகிற தல்லவா? அப்படியே பகவானும் தான் உண்மையில் தேஹபரிக்ரஹம் பண்ணுத வனுய் தன்னிடத்தில் தேஹமில்லாதிருக்கச் செய்தேயும் இருப்பதுபோல் மாயையி ஞல் காட்டிக் கொண்டு நிற்கிருன் என்பது சங்கராசார்யருடைய அபிப்ராயம். மாயா என்னுஞ் சொல்லுக்கு பொய்யென்பதே இவர் கொண்ட பொருளாகும். அந்த நாலாவது அத்யாயத்திலேயே மேல் ஒன்பதாவது ச்லோகத்தில் ["ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத:, த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந.]" என்பதில் பகவான் தானே தன்னுடைய அவதாரத்தையும் அவதார சேஷ்டிதத்தையும் ஸத்யமாக எவன் அறிகிருனே அவன் வர்த்தமான தேஹத்தை விட்டொழித்து மறு பிறவியடையாமல் தன்னையே யடைவதாகச் சொல்லியிருக்கின் ருன். 'மே ஜந்ம கர்ம ச ய: தத்த்வத: வேத்தி' என்றிருப்பதை ஸ்வமதப்ரதிகூலமாக நினைத்த சங்கராசார்யர் வெகு சாதுர்யமாய் வேறுவிதமாக அந்வயம் காட்டியுள்ளார். தத்த்வத: என்பதை 'யோ வேத்தி' என்பதில் கூட்டாமல் 'தத்த்வத: தேஹம் த்யக்த் வா' என்று உத்தரார்த்தத்திலே அந்வயித்துப் பொருளுரைத்தார். அவர் இவ் வளவு ச்ரமம் எதற்காகப் படுகிருரென்ருல் 'ஸம்பவாமி ஆத்மமாயயா' என்றுள்ள விடத்தில் மாயா சப்தத்திற்குத் தாம் கொண்ட பொருளே பொருளென்கிற வொரு அபிநிவேசத்தினுல்தான்.

ப்ராமாணிகர்கள் இங்கு மத்யஸ்த நிலையில் நின்று ஒன்று குறிக்கொள்ள வேண்டும். தைத்திரீய யஜுர்ப்ராஹ்மணத்தில் காடக ச்ருதியில் மூன்ரும் ப்ரச்நத்தில் "யாவந்த: பாம்ஸவோ பூமே:; ஸங்க்யாதா தேவமாயயா" என்று ஓதப்பட்டி ருக்கின்றது. பூமியிலுள்ள மண்துகள்களெல்லாம் தேவர்களின் மாயையினுல் கணக் கிடப் பெற்றவையாக இதில் சொல்லப்படுகிறது. இங்கு மாயையென்பதற்கு பிறர் கூறும் பொருள் பொருந்தமாட்டாதென்பது வெளிப்படை. பூமியிலுள்ள மண்துகள் கள் மனிதர்களின் ஞானத்தினுல் கணக்கிட முடியாதவையாயினும் தேவர்களின் ஞானத்தினுல் கணக்கிடக்கூடியவையே யாதலால் இங்கு 'தேவமாயயா' என்றதற்கு 'தேவர்களின் ஞானத்தாலே' என்பதுதான் பொருளென்று யாவரும் நிராக்ஷேப மாக இசையத்தத்தக்கதாகும். வித்யாரண்யர் முதலான வேதபாஷ்யகாரர்களும் இப் படித்தான் இங்குப் பொருள் வரைந்துள்ளார்கள். ஆகவே (மாயா) என்பதற்கு 'மித்த்யா' என்று பொருள்கொள்வது பொருத்தமற்றதென்று தெளியக்கடவது. அஸுரராக்ஷஸாதிகள் செய்கிற செயல்களை மாயை யென்று சொல்லுவதுண்டு. அங்கும் மித்த்யா என்கிற அர்த்தம் கிடையாது. ஆச்சர்யகரம் என்பதுபற்றியே அங்கு மாயாசப்த ப்ரயோகம் பண்ணுவது. பிள்ளை லோகாசார்யர் தத்வத்ரயத்தில் அசித் ப்ரகரணத்தில் (10) "மாயையென்கிறது விசித்ரஸ்ருஷ்டியைப் பண்ணுகை யாலே" என்றருளிச் செய்த விடத்து வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள் "அஸுரராக்ஷஸாதி க்ரியைகளை ஆச்சர்யகரத்வத்தைப் பற்ற மாயாசப்தத்தாலே சொல்லுகிறப்போலே இத்தையும் [ப்ரக்ருதியையும்] மாயை யென்கிறது விசித்ர ஸ்ருஷ்டியைப் பண்ணுகையாலே, அதாவது, ஒன்றுபோலொன்றன்றிக்கே விஸ்மய நீயங்களான கார்யங்களை ஜனிப்பிக்கை" என்றருளிச் செய்ததும் இங்கே அநுஸந்

தேயம். "தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா" (7-14) என்ற கீதா ச்லோகத்தின் பாஷ்யத்தில் ஸ்வாமி வெகு விசதமாக நிரூபித்தருளியுள்ளார். அந்த திவ்யஸூக்திகள் அங்கு ஸேவிக்கத்தக்கவை. மாயாசப்தத்தின் உண்மைப் பொருளை யுணராதே தவறான பொருளைக் கொண்டதன் பயனாகவே மாயாவாதிகளின் வாதங்கள் மிக மிக வளர்ந்துவிட்டன.

கண்ணபிரான் அவதரித்ததும் பொய், தேஹபரிக்ரஹம் பண்ணினதும் பொய் என்று சொல்லும் பக்ஷத்தில் கீதாசாஸ்த்ரம் அவதரித்ததும் பொய்யென்றே சொன்னதாகத் தேறிவிடும். பொய்யான சாஸ்த்ரம் நம்முடைய உஜ்ஜீவனத்திற்கு எப்படி ஸாதனமாகும். வேங்கடாத்வரி இயற்றிய விச்வகுணாதர்சத்தில் வேதாந்தி வர்ணனத்தில் "த்ருச்யம் மித்த்யா த்ருஷ்டிகர்த்தா ச மித்த்யா தோஷோ மித்த்யா" இத்யாதியானவொரு ச்லோகம் வெகு அற்புதமாகக் காண்கிறது. 'பார்க்கப்படுகிற பொருள்களெல்லாம் பொய், பார்க்கிறவனும் பொய், அவித்யையாகிற தோஷமும் பொய் என்று கொள்ளுகிற இந்த மாயா வாதிகள், இவற்றுக்கு ஆச்ரய பூதமான ப்ரஹ்மமும் பொய்யென்று முடித்திருக்கலாமே; ஏன் அதைமாத்திரம் ஸத்யமென்று கொண்டார்களோ தெரியவில்லை—என்பதே இந்த ச்லோகத்தின் கருத்து. பொய்யன் சொன்ன—சொல்லுகிற வார்த்தைகளும் பொய்யாகு மாகையாலே தம்மைப் பொய்ய ரென்று நிலைநாட்டிக் கொள்ளுகின்ற இந்த மாயாவாதிகள் சொல்லுமதெல்லாம் பொய்யே என்பது இவர்கள் தம்மாலேயே ஸ்தாபிக்கப்பட்டுத் தீருவதனால் இவர்களைக் கண்டிக்க நாம் சிறிதும் ப்ரயாஸம் கொள்ளவேண்டியதில்லை யென்றும் ஒரு ரஸிக பண்டிதர் எழுதிவைத்திருக்கக் காண்கிறோம்.

கீதையின் இரண்டாமத்யாயத்தின் பன்னிரண்டாவது ச்லோகத்திலிருந்தே சாஸ்த்ராரம்ப மென்று சொல்லலாம். அதற்குக் கீழுள்ள பாகங்களெல்லாம் அவதாரிகையாக நிற்கிறது. அந்த பன்னிரண்டாவது ச்லோகம் எவ்விதமாகவுள்ளதென்று பார்க்கவேணும். "ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதிபா:, ந சைவ நபவிஷ் யாமஸ் ஸர்வே வயமத: பரம்" என்பதே அந்த ச்லோகம். இதன் பொருள் யாதெனில், ஸர்வேச்வரனாகிய நானும் இதற்கு முன் கழிந்த அநாதிகாலத்திலும் இருந்தவனே; அர்ஜுநா! நீயும் இந்த அரசர்களுமான க்ஷேத்ரஜ்ஞர்களுங்கூட முன்பும் இருந்தவர்களே. முன்பு இருந்தது மாத்திரமே யன்றிக்கே மேலுள்ள காலமு மெல்லாம் நானும் நீங்களும் இருக்கப்போகிறவர்களே என்பதாம். ஸர்வேச்வரனாய் பரமாத்மாவான நான் நித்யன் என்பதில் எப்படி ஸந்தேஹமில்லையோ, அப்படியே க்ஷேத்ரஜ்ஞர்களாய் ஜீவாத்மாக்களான நீங்களும் நித்யர்களென்பதில் ஸந்தேஹமில்லையென்று பகவான்தானே சோதிவாய் திறந்து பணித்துள்ளான். இதனால் ஸர்வேச்வரனான பகவானிற் காட்டிலும் ஜீவாத்மாக்களுக்குண்டான பேதமும், அந்த ஜீவாத்மாக்களுக்குப் பரஸ்பரமுண்டான பேதமும் பாரமார்த்திகமென்று பகவான் தானே வ்யக்தமாகத் தெரிவித்ததாய்த் தேறுகிறது. இந்த ச்லோகம் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு அடிப்படையாக வுள்ளதென்று நன்குணரலாம். நமது பாஷ்யகாரர் இந்த ச்லோகத்திற்கு இட்டருளியிருக்கின்ற பாஷ்யம் மிகவும் விபுலமாக வுள்ளது.

கீழே அர்ஜுனன் (2-7.) *ப்ருச்சாமி த்வா தர்மஸம்மூடசேதா:* என்று, தத்வார்த்தம் தெரியாமையினாலே தான் தளும்பி யிருப்பதாகவும் தன்னுடைய கலக்கம் தீர தத்வார்த்தத்தை அறுதியிட்டு அருளிச் செய்யவேணுமென்றும் சொல்லித் திருவடிகளில் விழுந்து யாசித்திருக்கிறான். அப்படிப்பட்டவனுக்கு தத்வோபதேசம் செய்யவே இந்த கீதாசாஸ்த்ரம் அவதரித்தது. கீதாசார்யன், கலங்கினவனுக்குச் சொல்லும்போது தெளிவான பொருளைச் சொல்லுவனே யல்லது கலங்கின பொருளையே சொல்லமாட்டானன்றோ. ஆகவே இந்த சாஸ்த்ரத்தில்

கூறப்படும் பொருள்கள் யாவும் ஸர்வாத்மநா பாரமார்த்திக மென்றே வைதிகர்கள் கொள்ளக் கடவர்கள். அதிலும் ஆரம்ப ச்லோகமான விதனில் கூறப்படும் விஷயம் உபநிஷதாதிகளில் வடிக்கட்டின பொருளாகவே யிருக்கத்தகும். இதில் ஜீவாத்ம பரமாத்மபேதம் முதலியன தெரிவிக்கப்படுமவை அபாரமார்த்திகமாக இருக்கச் சிறிதும் ஔசித்யமில்லை. ஆக இந்த நிரூபணங்களினால் ஸ்வாமி யெம்பெருமானார் உப நிஷத்து, ப்ரஹ்மஸூத்ரம், கீதை முதலானவற்றின் பொருள்களை ஆர்ஜவத்துடன் அறிந்து அறுதியிடுபவர் என்பது நிஷ்பக்ஷபாதர்களுக்குக் கையிலங்கு நெல்லிக்கனியாகும். இப்பெருமை பொலியவே யதிராஜஸப்ததியில் "யதாபூதஸ வார்த்தா யதிந்ருபதிஸூக்திர் விஜயதே" என்று பொருத்தமாகப் பேசப்பட்டது. * ந த்வேவாஹம் ஜாது நாஸம் * என்கிற ச்லோகத்திலே ஜீவாத்ம பரமாத்ம பேதமும் ஜீவர்களுக்குப் பரஸ்பரபேதமுமாகிற விவை காட்டப்பட்டது போல அதற்கடுத்த (13) ச்லோகத்தில் "தேஹிநோஸ்மிந் யதா தேஹே கௌமாரம் யௌவநம் ஜரா, ததா தேஹாந்தர ப்ராப்திஃ தீரஸ் தத்ர நமுஹ்யதி" என்பதில் ப்ரக்ருத்யாத்ம விவேகமும் காட்டப்பட்டது. அசேதநம் வேறு, சேதநன் வேறு என்கிற பகுத்துணர்வே ப்ரக்ருத்யாத்ம விவேக மெனப்படும். நிர்விசேஷ சிந்மாத்ர மான ப்ரஹ்ம மொன்று தவிர வேறு சேதநா சேதநங்கள் உண்மையில் கிடையா என்கிற வாதம் இங்கு நிராகரிக்கப்பட்டதாகிறது. "அந்தவந்த இமே தேஹாஃ— நஜாயதே ம்ரியதே வா கதாசித்—வாஸாம்ஸி ஜீர்ணானி யதா விஹாய" இத்யாதிகளான ச்லோகங்களினால் ஆத்மா நித்யனென்றும், தேஹம் அநித்யமென்றும் பரக்கச் சொல்லுகிற முகத்தாலும் சேதநா சேதநங்களின் ஸத்பாவம் பாரமார்த்திகமாகவே மூதலிக்கப்பட்டதாகிறது. ஆக கீதாசாஸ்த்ரம் விசிஷ்டாத்வைதிகளுக்கே நிதியானதென்றும் மற்றையோர்க்கு இதுகொண்டு பணியில்லை யென்றும் சொல்லிற்றாயிற்று. உண்மையுரையில் உள்ளம் சீறலாகாது. ... .... .... *

## 10. ஆண்டாள் பாசுர மொன்றில் அரும்பெரும் பொருள்.

சோங்கலரும் பொழில் மாலிருஞ் சோலையில் கொன்றைகள்மேல்
தூங்குபொன்மாலைகளோடு உடனாய்நின்று தூங்குகின்றேன்
பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலியும்
சார்ங்கலில் நாணொலியும் தலைப்பெய்வதெஞ்ஞான்றுகொலோ.

இப்பாசுரம் நாச்சியார் திருமொழியில் ஒன்பதாவது பதிகமாகிய * சிந்துரச் செம்பொடியில் ஒன்பதாவது பாசுரம். இதிலுள்ள விசேஷார்த்தத்தைச் சாமானியர்கள் அறியகில்லார். பல தமிழ்ப்புலவர்களிடத்தில் இப்பாசுரத்தைக் கொடுத்துப் பொருள் சொல்லுமாறு வேண்டிக் கொண்டேன். "பெரியார்கள் வியாக்கியானம் செய்திருப்பார்களே" என்பதுதான் உத்தரமாகத்தேறியது. உண்மையில் நம் ஆசாரியர்கள் அருளிச்செய்த வியாக்கியானங்கொண்டே அறியவேண்டிய அரும் பொருளமைந்த பாசுரங்களில் இதுவுமொன்று.

திருமாலிருஞ் சோலைமலையிற் கொன்றை மரங்களின் மீது தொங்குகின்ற கொன்றைப்பூமாலைகளோடொப்ப நானும் தூங்குகின்றேன்—என்று கூறுகின்ற ஆண்டாளுடைய கருத்து யாதெனில், கேண்மின் ;—பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீ ஸூக்தியை முந்துற உதாஹரித்துப் பின்னை விவரிக்கின்றோம்.

"தாமஸ புருஷர்கள் புகும் தேசமன்று; ஸாத்விகர் இதுகொண்டு காயரியங்கொள்ளார்கள். பெரியாழ்வார் வயிற்றிலே பிறந்து பகவதர்ஹமான வஸ்து இங்ஙனே இழந்திருந்து க்லேசப்படுவதே." —என்பது வியாக்யான ஸ்ரீஸூக்தி.

(விவரணம்) திருமாலிருஞ்சோலைமலையானது மிகச் சிறந்த ஸ்ரீவைஷ்ணவ க்ஷேத்திரமாதலால் அங்கு ஸாத்விக புருஷர்கள் ஏறிப்போவார்களேயன்றி ராஜஸ தாமஸபுருஷர்கள் ஏறிப்போகமாட்டார்கள் என்பதை முன்னம் நெஞ்சிற் பதிய வைத்துக்கொள்க. கொன்றைப்பூக்கள் தேவதாந்தரங்களின் ஆராதனைக்கு உபயோகப்படக் கூடியவை யாதலால் அவை ராஜஸ தாமஸ புருஷர்களால் கொள்ளப் படுமே யல்லது ஸாத்விக புருஷர்களால் கொள்ளப்படமாட்டா என்பது அறியத் தக்கது. ஸாத்விகர்கள் மாத்திரமே புகுமிடமாய் ராஜஸ தாமஸர்கள் எட்டிப்பாராத விடமான திருமாலிருஞ்சோலையில் கொன்றைகள் பூத்தால் அவற்றைக் கொள்வார் ஆர்? என்று பார்க்கவேணும். ஆருமில்லை யென்பது தேறும். அவை அங்கே வீழ்வ தொழிய வேறோர் உபயோகமும் அவற்றுக்கில்லை யென்றே சொல்லவேண்டும். ஆகவே அங்குற்றைக் கொன்றை மலர்களின் தோற்றம் எப்படி வீணோ அப்படியே என் ஜன்மமும் வீணாயிற்றே! என்று நொந்து பேசினபடி.

திருமங்கையாழ்வார் பெரிய திருமடலில் "கன்னவிலுங் காட்டகத்தோர் வல்லிக் கடிமலரின், நன்னறுவாசம் மற்றோரானு மெய்தாமே, மன்னும் வறு நிலத்து வாளாங்கு உகுத்ததுபோல், என்னுடைய பெண்மையும் என்னலனுமென்முலையும், மன்னுமலர் மங்கை மைந்தன், கணபுரத்துப் பொன்மலை போல் நின்றவன் தன் பொன்னகலம் தோயாவேல், என்னிவைதான் வாளா எனக்கே பொறையாகி, முன்னிருந்து மூக்கின்று மூவாமை காப்பதோர், மன்னுமருந்தறிவீரில்லையே!" என்றருளிச் செய்ததும் இங்கு நினைக்கத்தக்கது.

ஆக இவ்வளவும் முன்னிரண்டடிகளின் விசேஷார்த்தம். இனிப் பின்னடிகளின் விசேஷார்த்தமாவது ;—சங்கின் ஒலியும் சார்ங்கவில் நாணொலியும் என் காதில் எப்போது விழும் என்கிறாள் பின்னடிகளில். "இரண்டவதாரத்தில் இரண்டு பிராட்டிமார்க்கு உதவினது தனக்கு ஒருத்திக்குமே வேண்டும்படியாயிற்று இவள் தசை" என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி. இரண்டவதாரத்தில் இரண்டு பிராட்டிமார்க்கு உதவினபடிகளாவன ;—

1. கண்ணபிரானையன்றி மற்று எவனையும் கனவிலுங் கருதாதிருந்த ருக்மிணிப் பிராட்டிக்கு சிசுபாலனோடு விவாஹம் நடப்பதாகக் கோடித்து ஸித்தமாயிருந்த ஸமயத்தில் கண்ணபிரானது வரவை எதிர்பார்த்திருந்த அப்பிராட்டியின் நெஞ்சு முறிந்துபோய் இனி நாம் உயிர் துறப்பதே நல்லுபாயம் என்று நிச்சயித்திருந்த க்ஷணத்தில் கண்ணபிரான் பதறி ஓடிவந்து புறச் சோலையிலே நின்று தனது ஸ்ரீபாஞ்சஜந்யத்தை பம்! பம்!! என்று ஊத, அதனோசையானது அந்த ருக்மிணிப் பிராட்டியின் செவியிற் புகுந்து எப்படிப்பட்ட ஆனந்தத்தை உண்டாக்கிற்றோ, அப்படிப்பட்ட ஆனந்தம் எனக்கு என்றைக்கு உண்டாகும்!

2. இராவணனானவன் ஸீதையிடம் வந்து இராமபிரான் இறந்தனனாக ஒரு பொய்க் கூற்றுக் கூறி ராமனது மாயா சிரஸ்ஸைக் காட்டி வெருட்டினபோது அப்பிராட்டி வருந்திக்கிடக்கும் க்ஷணத்திலே இராமபிரான் கடற்கரையிலே நின்று தனது சார்ங்க வில்லை டைம்! டைம்!! என்று ஒலிப்பிக்க, அவ்வொலியானது ஸீதையின் செவியிற் புகுந்து எப்படிப்பட்ட ஆனந்தத்தை விளைத்ததோ அப்படிப்பட்ட ஆனந்தம் எனக்கு என்றைக்கு உண்டாகும்! என்றாளாயிற்று. .... *

## 11. எம்பெருமானளிக்கும் ஸர்வஸ்வதானம்

எம்பெருமான் இராமபிரானாகவும் கண்ணபிரானாகவும் திருவவதாரங்கள் செய்த போது பரமபக்தர்களிடத்திலே தன்னுடைய விசேஷாபிமானத்தை விசேஷ முறையில் காட்டியிருக்கிறான். பக்தர்களுக்குத் தன் திருமேனியைக் கொடுத்தருள்வதுதான்

சிறந்த வெகுமதி. அதாவது பரிஷ்வங்கமென்று சொல்லப்படுகிற ஆலிங்கனம். இது ஸ்ரீராமக்ருஷ்ணுவதாரங்களில் மூன்று பக்தர்களுக்கு அருளப்பட்டதாகத் தெரிய வருகிறது. ஸ்ரீராமாவதாரத்தில் திருவடிக்கும் பரதாழ்வானுக்கும்; ஸ்ரீ க்ருஷ்ணுவதாரத்தில் அக்ரூரனுக்கு.

இவ்விஷயத்திற்கு முறையே பிரமாணங்களாவன (1) ஸ்ரீராமாயணம் யுத்த காண்டத்தில் (1—14) * ஏஷ ஸர்வஸ்வ பூதஸ் து பரிஷ்வங்கோ ஹநுமத:, மயா காலமிமம் ப்ராப்ய தத்தஸ் தஸ்ய மஹாத்மந: * என்கிற ச்லோகம் திருவடிக்குக் கிடைத்த ஆலிங்கனத்தைச் சொல்லுவது. (2) யுத்தகாண்டத்திலேயே (130—38) * தம் ஸமுத்தாப்ய காகுத்ஸ்தச் சிரஸ்யாக்ஷிபதம் கதம், அங்கே பரதமாரோப்ய முதித: பரிஷஸ்வஜே. * என்கிற ச்லோகம் பரதாழ்வானுக்குக் கிடைத்த ஆலிங்கனத்தைச் சொல்லுவது. (3) ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் (5—18—2) * ஸோப்யேநம் த்வஜவஜ்ராப்ஜக்ருதசிஹ்நேந பாணிநா, ஸம்ஸ்ப்ருச்ய ஆக்ருஷ்ய ச ப்ரீத்யா ஸுகாடம் பரிஷஸ்வஜே * என்கிற ச்லோகம் அக்ரூரனுக்குக் கிடைத்த ஆலிங்கனத்தைச் சொல்லுவது. ஆக இம்மூன்று பரிஷ்வங்கங்களிலும் பரஸ்பரமுள்ள வாசியை நம் ஆசாரியர்கள் அழகாகக் கண்டறிந்துள்ளார்களென்று தோன்றுகிறது.

ஆசார்ய ஹ்ருதயத்தில் (2—35.) * வித்யை தாயாகப் பெற்று * இத்யாதியான பெரிய சூர்ணையில் "பரதாக்ரூரமாருதிகளைப் பரிஷ்வங்கித்த மணிமிகுமார்விலே" என்றுள்ளது. மேலே விளங்கக் காட்டிய மூன்று ப்ரமாணங்களிற் கண்ட மூவரும் இங்கு எடுக்கப்பட்டிருக்கிறார்கள். ஆனல் முறை தவறியிருக்கின்றது. "மாருதிபரதாக்ரூரர்களை" என்றிருக்க வேண்டியதன்றோ முறைமை. முதல்பரிஷ்வங்கம் மாருதிக்கு; அதற்கடுத்த பரிஷ்வங்கம் பரதாழ்வானுக்கு. கடையான பரிஷ்வங்கம் அக்ரூரனுக்கு என்றிப்படி ப்ரமாண ப்ரதிபந்நமான முறைமையிருக்க, ராமாவதார பக்தர்களான இருவரின் இடையே க்ருஷ்ணுவதார பக்தனை அக்ரூரனைக் கொண்டு தள்ளியும், முதல் பரிஷ்வங்கம் பெற்ற மாருதியைப் பின்னே தள்ளியும் "பரதாக்ரூரமாருதிகளை" என்று விலக்ஷணக்ரமமாக அருளிச் செய்திருப்பது என்கொண்டு? என்று விமர்சகர்கள் ஆராய வேண்டுவது அவசியம். யாரேனும் பெரியார் ஆராய்ந்து ஒரு வியாஸமருளினல் நன்ரும். .... ... .... .... .... *

## 12. ராமானந்தீய வைணவர்கள்.

வட இந்தியாவில் வைராகிகள் அல்லது பைராகிகள் என வழங்கப்படும் கூட்டத்தார் லக்ஷக்கணக்காக இருக்கிறார்களென்று தெரிய வருகிறது. இவர்களெல்லோரும் ஒரே மதத்தைச் சேர்ந்தவர்களல்லர். மாத்வ ஸம்ப்ரதாயம். விஷ்ணுஸ்வாமி ஸம்ப்ரதாயம், நிம்பார்க்க ஸம்ப்ரதாயம். ராமாநுஜ ஸம்ப்ரதாயம் ஆகிய நான்கு ஸம்ப்ரதாயத்தவர்களும் வைராகி வகுப்பிற் சேர்ந்திருக்கின்றனர். இவர்களுள் ராமாநுஜ ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவர்கள் ராமாநந்தீய வைஷ்ணவர்கள்.

இந்த ராமானந்திய வைஷ்ணவர்கள் இது வரையில் தாங்கள் ராமாநுஜ ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவர்களென்றும், தம் ஆசார்யர்களுள் நம்மாழ்வார் நாதமுனிகள் உடையவர் மணவாளமாமுனிகள் முதலானேர் சேர்ந்தவர்களென்றும் சொல்லி வந்தார்கள். சில வருஷ காலமாக மதாந்தரஸ்தர்களின் துர்ப்போதனையினல் இவர்களுள் சிறுபான்மையோர் ஒரு கிளர்ச்சி செய்யத் தொடங்கியிருக்கின்றனர். தாங்கள் ஸ்ரீராமாநுஜரின் சிஷ்ய பரம்பரையில் சேர்ந்தவர்களல்ல வென்றும், தங்களுடைய குரு பரம்பரை வேறென்றும் இவர்கள்கூறத் தலைப்பட்டிருக்கிறார்கள். இவ்வளவோடும் இவர்கள் நின்றுவிடவில்லை. ஸ்ரீமஹாலக்ஷ்மியைத் தலைவியாகக் கொண்ட ஸம்ப்ரதாயம் தங்களுடையதே யென்றும் சொல்லத் தலைப்பட்டிருக்கிறார்கள். வட இந்தியாவில் இது விஷயமாகப் பெருத்த கிளர்ச்சி உண்டா யிருக்கின்றது. அயோத்தியில் இவர்களின் ப்ராபல்யம் மிகவும் காண்கிறது. .... .... *

## 13. ஸ்ரீராம கதைகளில் அபூர்வமானதொன்று.

(கம்பராமாயணம் அயோத்தியா காண்டம்—மந்தரை சூழ்ச்சிப்படலம் – 41.)

தொண்டைவாய்க்கேகயன் தோகை கோயின்மேல், மண்டினுள் வெகுளியின் மடித்த வாயினுள்
பண்டைநா ளிராகவன் பாணிவில்லுமிழ், உண்டையுண்டதனைத் தன்னுள்ளத் துள்ளுவாள்.

| | |
|---|---|
| பண்டை நாள் | முற்காலத்தில் |
| இராகவன் பாணி வில் உமிழ் உண்டை | இராமனது கையிலுள்ள வில்லினுல் வெளிப்படுத்தப்பட்ட உண்டையானது |
| உண்டதனை | மேற்பட்டதனை |
| தன் உள்ளத்து உள்ளுவாள் | தன் மனத்தில் நினைத்து |
| வெகுளியின் மடித்த வாயினுள் | கோபத்தினுல் மடிக்கப்பட்ட நாக்கையுடையவளுமாகி |
| தொண்டை வாய் கேகயன் தோகை | கொவ்வைக்கனி போன்ற அதரத்தையுடைய கைகேயியினது |
| கோயில் மேல் | மாளிகையில் |
| மண்டினுள் | நெருங்கினுள். |

**** இராமன் இளமையில் கையிற் சிறு வில்லும் மண்ணுண்டையுங் கொண்டு குளத்தினருகேவிளையாடிவருகையில், மந்தரையென்னுங் கூனி குடங் கொண்டு நீர்மொண்டு மற்றுஞ்சில பெண்களோடு கூடி நடந்து செல்லுகையில் இராமன் விளையாட்டாக எய்த மண்ணுண்டை இவள் மேலே பட, அதனுல் இவள் கைநெகிழ்ந்து குடம் வீழ யாவரும் சிரித்தார்களாம்; அப்போது இவள் கடுங்கோப முற்று ராஜகுமாரனுதலால் ஒன்றுஞ் செய்ய இயலாது வாளா சென்று தனக்கு வாய்க்குந் தருணத்தை நோக்கிக் கொண்டிருந்தா ளென்றும் அத்தருணம் இப்போது வாய்த்த தென்றுஞ் சொல்லுவர். இக்கதை வான்மீகத்திலில்லை; வேறு இதிஹாஸ புராணங்களில் இருப்பதாகவும் தெரியவில்லை. திருவாய்மொழியில் (1—5—5) *கூனே சிதைய வுண்டை வின்னிறத்தில் தெறித்தாய் கோவிந்தா * என்றவிடத்து வியாக்கியானத்தில் [ஈட்டில்] இக்கதை எடுத்துக் காட்டப் பட்டுள்ளது. இக்கம்பரும் மேலே கிட்கிந்தா காண்டத்திலும் அரசியற்படலத்தில் "சிறிய ரென்றிகழ்ந்து நோவு செய்வன செய்யேல் மற்றிந், நெறியிகந்து யானோர்தீமை யிழைத் தலா லுணர்ச்சிநீண்டு. குறியதாமேனியாய கூனியால் குவவுத்தோளாய், வெறியன வெய்தி நோய்தின் வெந்துயர்க் கடலில் வீழ்ந்தேன் " என்ற செய்யுளில் இராமபிரானுடைய வாக்காகவே வைத்து இக் கதையைக் குறிப்பிட்டுள்ளார். [இச் செய்யுள் இராமன் வாலிவதமான பின்பு ஸுக்ரீவனுக்கு முடிசூட்டி அவனுக்குச் சில ஹிதோப தேசங்கள் செய்யுமடைவிலே உள்ளது. எவர் விஷயத்திலும் வலிமை நிலைகளில் எளியவரென்பது பற்றி அலக்ஷியஞ் செய்து வருத்தந் தருஞ் செயல்களைச் செய்யாதே; நான் இந்தச் சன்மார்க்கத்தின் வரம்பைக் கடந்து ஒரு தீங்கு செய்த தனுலே கூனியினிடம் கஷ்டங்களை யடைந்து துன்பக்கடலில் விழுந்தேன் என்பது மேற்குறித்த செய்யுளின் கருத்து.]*

*தேவர்கள் தங்கள் கோரிக்கை நிறைவேறுதற்கு இராகவன் வனம்புக வேண்டுமென்று கருதிப் பட்டாபிஷேகத்தைக் கலைப்பதற்குக் கூனியை யனுப்பினர் களென்றும், அப்பிரான் சிறுபிராயத்திற் செய்த விளையாட்டுத் தொழில் ஒரு வியாஜமாகக் கூறப்பட்ட தென்றும் மேலோர் கருதுவர். .... ... **

## 14. " தீக்குறளை சென்றோதோம் "

சூடிக்கொடுத்த சுடர்க்கொடி பணித்த உலகம் புகழ நின்ற திருப்பாவையின் இரண்டாம் பாட்டில் [*வையத்து வாழ்வீர்காள் என்பதில்] " செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்றோதோம் " என்பது ஆறாமடி. இதில் " தீக்குறளை சென்றோதோம் " என்னும் பகுதியைப் பற்றிச் சில பத்திரிகைகளில் ஏதோ விசாரம் நிகழ்வதாகத் தெரிய வருகிறது. சில மாதங்களுக்கு முன்பு ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து சில ஆப்தர்கள் இவ்விஷயமாக வொரு வியாஸம் ஸ்ரீராமாநுஜனில் வெளி வருவது நலம்" என்று தெரிவித்திருந்தார்கள். ஆனால் அப்போது நமக்கு இதில் என்ன விசாரம், என்ன விவாதம் என்பது சிறிதும் தெரியவராமலிருந்தபடியாலும், தெரிந்துகொள்ள ருசியு முண்டாகாமலிருந்தபடியாலும் வாளாவிருந்திட்டோம். மார்கழித் திங்கள் பிறப்பதற்குச் சில நாள் முன்னே "குமுதம் என்கிற பத்திரிகையின் 21—11—63 தேதியில் வெளிவந்த இதழையும், 5—12—63 தேதியில் வெளிவந்த இதழையும் வரவழைத்துப் பார்த்து மார்கழியில் நடக்கப்போகிற திருப்பாவை யுபந்யாஸத்தில் இரண்டா நாளில் இதைப்பற்றிச் சபையினர்க்கு விளக்கம் தருக" என்று சில பெரியார்கள் அன்புடன் ஸ்ரீமுகம் நியமித்திருந்தார்கள். குறித்த அவ்விரண்டிதழ்களையும் பெறுவதற்கு நாம் முயற்சி செய்தும் விரைவில் கிடைக்காததனால், குமுதம், கல்கி, தினமணி முதலான பத்திரிகைகளை வாசிப்பதையே போது போக்காகக் கொண்ட சில நண்பர்களைச் சந்தித்துக் கேட்டதில் விசார விஷயம் சுருக்கமாகத் தெரிந்து கொள்ளலாயிற்று. 17—12—63 தேதியன்று சென்னையில் நாம் நடத்திய திருப்பாவையுபந்யாஸத்தில் இதைப் பற்றிச் சிறிது ஸாரமாகப் பேசினோம். அதைக் கேட்டிருந்த பக்தர்களில் ஒருவர் மேலே குறிப்பிட்ட குமுதவிதழ்களிரண்டையும் மறுநாளே கொணர்ந்து கொடுத்தார்கள். விஷயங்கள் நமது செவியில் முன்னடி விழுந்தபடியே யிருந்ததனால் முதல் நாளிரவு நாம் ஸபையிற் பேசினது யுக்தமாகவே யிருந்ததென்று கொண்டோம். இவ்விஷயங்கள் உலகுக்கு நன்கு தெரியவேண்டியதற்காக இஃது ஓர் உபந்யாஸமாக இங்கு வெளியிடப் படுகின்றது.

21—11—63ல் வெளிவந்த குமுதத்தில் இரண்டில் ஒன்று என்கிற தலையங்க வியாஸம் அப்படியே இங்கு அநுவதிக்கப்படுகிறது ;—

" சொல்லுக்குப் பொருள் என்ன ? சொல்லுக்குள்ளே ஒளிந்திருக்கும் பொடி என்ன ? சொல்லுக்குப் பின்னால் பதுங்கியிருக்கும் நயம் என்ன ? என்றெல்லாம் நுணுகி ஆராய்வதும், ஆராய்ச்சியின் விளைவாகக் கருத்து வேறுபடுவதும், வேறு பாட்டைத் தொடர்ந்து சொற்போர் நிகழ்த்துவதும் பண்டிதர்களுடைய வேலை ; பொது மக்களுடையது அல்ல.

ஆனால் சில சந்தர்ப்பங்களில், சொல் ஆராய்ச்சி, புலவர் குழாத்திலிருந்து எழும்பிப் பொதுமேடையில் குதித்துவிடுவதும் உண்டு.

இப்போது அப்படி முன்னணிக்கு வந்திருக்கும் சொல் : குறளை.

குறளை என்றால், கோள் ; நிந்தனை. கோள் மூட்டுவது ; புறங்கூறுவது ; ரகசியங்களை வெளியிடுவது—இதற்குக் குறளைபேசுவது என்று பெயர்.

'செய்யாதன செய்யோம், தீக்குறளைச் சென்றோதோம்' என்ற திருப்பாவையில், 'குறளை' என்ற சொல் இந்தப் பொருளில் ஆளப்பட்டிருப்பதாகத் தமிழ் அறிஞர்கள் தொன்றுதொட்டுக் கூறிவந்திருக்கிறார்கள்.

இப்போது, திடீரென்று, புதிதாக ஒரு வியாக்கியானம்.

'தீக்குறளைச் சென்றோதோம்' என்பதற்கு, 'தீய திருக்குறளைப் படிக்க மாட்டோம்' என்று வணக்கத்துக்குரிய காஞ்சி சங்கராசாரிய சுவாமிகள் அவர்கள் பொருள் கற்பித்திருப்பதாகத் தெரிகிறது. எவ்வளவு பெரிய துரதிர்ஷ்டம்!

திருப்பாவை பக்திரசத்தில் ஊறிய தீஞ்சுவைப் பனுவல். அதிலே, திருக்குறளை இகழவோ, திருக்குறளைத் தீமை பயப்பது என்று தாக்கவோ எவ்விதக் காரணமும் இருப்பதாகப் புலப்படவில்லை.

திருக்குறள், வெறும் நூல் அல்ல. அது தமிழனில் பாதி. அதை நீக்கிவிட்டால், தமிழன் அரைத் தமிழனே. அந்த அளவுக்கு அவன் ரத்தத்தோடு ரத்தமாக, மூச்சோடு மூச்சாக, எண்ணத்தோடு எண்ணமாக அது கலந்துவிட்டது. அது தெய்வ நூல், பொய்யாமொழி, தமிழ்மறை.

அத்தகைய நூலைத் திருப்பாவை பழிப்பதாகக் கூறப்பட்டதும், தமிழர்களுடைய மனம் புண்பட்டதில் வியப்பு என்ன? சாதாரண மக்களுக்கே இப்படியென்றால், புலவர்களைப் பற்றிக் கேட்க வேண்டாம். புலவர் மாநாட்டிலே அவர்கள் ஒரு கண்டனத் தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்கள்.

திருப்பாவை, திருக்குறள் இரண்டையும் போற்றும் தமிழ் அறிஞர்களும், ஆசாரிய சுவாமிகளிடத்திலும் தமிழிடத்திலும் ஈடுபாடு உள்ள தமிழ்ப் பேராசிரியர்களும் இந்த விஷயத்தில் முன்னின்று ஏதாவது செய்வது நல்லது.

இல்லாவிட்டால், 'திருப்பாவை படிப்பவர்கள் திருக்குறளைத் தீண்டக்கூடாது, திருக்குறள் ஓதுபவர்கள் திருப்பாவையை ஏறெடுத்துப் பார்க்கக்கூடாது. இரண்டிலொன்று' என்ற வருந்தத்தக்க ஒரு நிலை ஏற்பட்டுவிடக்கூடும்."

ஆக இவ்வளவும் 21—11—63 தேதி யன்று குமுதத்தில் வெளிவந்த வியாஸம்.

இனி, 5—12—63 தேதியன்று குமுதத்தில் வெளிவந்த வியாஸம் வருமாறு ;—

## "சிக்கல் தீர்ந்தது"

["ஆசாரிய சுவாமிகளிடத்திலும் தமிழிடத்திலும் ஈடுபாடு உள்ளவர்கள் இந்த விஷயத்தில் முன்னின்று ஏதாவது செய்தால் நல்லது" என்று 21—11—63 இதழில் கேட்டுக் கொண்டோம். திருமதி சௌந்தரா கைலாசம் அந்த வேண்டுகோளை நிறைவேற்றியிருக்கிறார்.]

........சிக்கலுக்குச் செல்லும் வழியில் மக்களுக்கு நல்ல வழி காட்டிவரும் காஞ்சி சங்கராச்சாரிய சுவாமிகளைக் காணும் பேறு பெற்றேன். அவர்கள் முன் அமர்ந்திருந்தபொழுது, உலகனைத்தும் வியந்தேத்தும் ஒப்புயர்வற்ற ஒரு நூலாகிய திருக்குறளை, மனமார நான் மதித்து வருகின்ற பெரியவர்களாகிய ஆசாரிய சுவாமிகள் குறைகூறிப் பேசி யிருப்பார்களா, பேசி யிருந்தால் அது வருந்தத் தக்கதுதான் என்று என்னுள் 'நக்கீர மனம்' சொல்லிக் கொண்டிருந்தது. அந்தத் திசையிலேயே உரையாடலும் செல்ல ஆரம்பித்தது. சுவாமிகள் சொன்னார்கள். (அதாவது)

"கடந்த ஜூன் மாதத்தில் மதுரையில் பேசுகையில், நூல்களிலேயே குறள் சிறந்த நூல் என்று தெளிவாகக் குறிப்பிட்டேன். அதை வலியுறுத்த விரும்பியே திருப்பாவைப் பாடல் ஒன்றை விளக்கினேன். அந்தப் பாடல் பாவையர் மேற்கொள்ளும் நோன்பு பற்றிக்கூறுவது ; பாவையர் கூறுவதுபோல் அமைந்துள்ளது. நோன்புக்காலத்தில் ஆசையாய் மலரணியோம், அழகெண்ணி மை யெழுதோம். ஏன்? இனிமையான குறளைக்கூட ஓதமாட்டோம், இறைவன் நினைவில் ஆழ்ந்துவிடுவோம் என்று பாவையர் கூறுவதாகப் பொருள் கொள்ளலாம் என்று சொன்னேன். அப்படி நான் புதிதாக விளக்கப் புகுந்தது, குறளின் பெருமையை வலியுறுத்துவதற்காகத் தானே தவிர, அதைக் குறைவு படுத்துவதற்காக அல்ல!" என்று ஆசாரிய சுவாமிகள் தெளிவுபடுத்தினார்கள்.

இரண்டில் ஒன்று என்ற நிலை வேறு; இரண்டும் ஒன்று, இரண்டிலும் ஒன்று என்ற அதி உன்னத நிலை வேறு. அத்தகைய உன்னத நிலையில் உள்ளவர்கள் ஆசாரிய சுவாமிகள் அவர்கள். கோளறு திருப்பதிகத்தை நாடெங்கும் படிக்க வேண்டும் என்று கூறியவர்கள்; குறளில் உள்ள கடவுள் வாழ்த்துப் பாக்களைப் பள்ளிகளில் ஓத வேண்டுமென்று கூறியவர்கள். அவர்கள் குறைகூறுவார்களா குறளைப்பற்றி? அவர்கள் என்னிடம் கூறினார்கள்: "புகழ்ந்து பேசினேனே தவிர, நான் இகழ்ந்து பேசவில்லை. சொற்பொழிவின் போக்கில் திருப்பாவை பாடல் ஒன்றுக்குப் புது விளக்கம் ஒன்று சொல்ல நேர்ந்தது. உரை சொன்னது பொருந்தியதா, பொருந்தவில்லையா என்பது வேறு; உரை சொன்னதன் உள் நோக்கம் குறட் பெருமையை உணர்த்துவதுதான்." .... (இவ்வளவும் குமுதத்தில் வெளிவந்த வியாஸங்கள்.)

## இனி இதில் நம்முடைய நிர்ணயம்

உலகமெல்லாம் வணங்கவும் போற்றவுமுரிய பெரியார் "தீக்குறளை சென்றோதோம்" என்ற திருப்பாவைப் பாசுரத்தைக் கையாள்வதற்கு ப்ரஸக்தியே கிடையாது. இப்பாசுரத்தைக் கையாண்டது திருப்பாவையைப் பழிக்க என்று ஒரு சாராரும், திருக்குறளைப் பழிக்க என்று மற்றொரு சாராரும் கருதுவதாகப் பிரவாதம் உலகம் பரவிவிட்டது. ஆசாரிய சுவாமிகள் தாமே சொன்னதாக மேலே வெளி வந்திருப்பதில் "இனிமையான குறளைக்கூட ஓதமாட்டோம், இறைவன் நினைவில் ஆழ்ந்து விடுவோம் என்று பாவையர் கூறுவதாகப் பொருள்கொள்ளலாமென்று தாம் சொன்ன"தாகவும், "இப்படி புதுவிளக்கம் கொடுத்தது குறளின் பெருமையை வலியுறுத்துவதற்கே தவிர அதைக் குறைவு படுத்துவதற்காகவல்ல" என்று சொன்னதாகவும் காண்கிறது. மேலெடுத்த திருப்பாவைச் சொல்தொடரில் குறள் என்னுஞ் சொல்லே இல்லாமலிருக்க, குறளின் பெருமையை வலியுறுத்துவதற்கு அந்தப் பாசுரத்தைக் கையாள ப்ரஸக்தியேயில்லையே! என்பதையே நாம் மீண்டு மீண்டும் எழுதவேண்டியதாகின்றது. குறள் என்னுஞ் சொல் திருப்பாவையில் ஸ்பஷ்டமாக இருக்க, அஃது இல்லையென்பது என்னே! என்பர் பலர். இங்குத் தத்துவமுணர்த்துகின்றோம் கேண்மின். திருப்பாவைக்கு நாம் பல உரைகள் எழுதி வெளியிட்டிருக்கின்றோம்; அவை உலகம் பரவியுமுள்ளன. தீக்குறளை யென்ற விடத்து (அவ்வுரைகளில்) நாமெழுதியிருப்பதை ஈண்டு அநுவதிக்கிறோம். 28-12-'62ல் நாம் வெளியிட்டுள்ள ஆழ்பொருள் விளக்கென்னு முரையில் (பக்கம் 12ல்):—

"தீக்குறளை சென்றோதோம்—" தீக்குறளைச் சென்றோதோம் என்று பலர் வாயிலும் வருகிற பாடம் தவிர்க்கத் தக்கது. இங்குக் குறள் என்று சொல்வடிவமன்று; குறளை என்றே சொல்வடிவம். சந்தியில் இரட்டிப்புவாராது, இயல்பேயாம். (அதாவது, குறளைச் சென்றோதோம் என்றாகாது, குறளைசென்றோதோம் என்றே நிற்குமென்கை.) கோட் சொல், நிந்தை வம்புப் பேச்சு, பொய்யுரை இவற்றுக்குத் தீக்குறளையென்று பெயர். தன்னிடத்தில் தீயகுணங்கள் நிரம்பியிருக்கச் செய்தேயும் தன்னை மஹாகுணசாலியாகப் புகழ்ந்து கொள்ளுதல், பிறரிடம் பல நற்குணங்களிருக்கச் செய்தேயும் அவற்றை விட்டுச் சில தோஷங்களையே விரித்துரைத்தல், நற்றங்களையும் குற்றமாக்கிப் பேசுதல், உண்மையும் பூதஹிதமுமல்லாத பேச்சுக்களைப் பேசுதல், ப்ராப்த விஷயத்தைத் துதிக்க அமைந்த நாவைக்கொண்டு அப்ராப்த விஷயங்களைத் துதித்தல், நிஷ்காரணமாகப் பெரியோர்களைப் பழித்தல் முதலிய நாவகாரியங்களைத் தவிரவேணுமென்று சிக்ஷிக்கிறபடி." என்று விவரணம் காட்டியுள்ளோம். பெரியவாச்சான் பிள்ளை முதலான பூருவாசாரியர்களின் வியாக்கியானங்களிலுள்ள பொருளை நாம் விரித்துரைத்தோமத்தனை யொழிய, நாம் புதிதாகக் கண்டுரைத்த பொருளன்றிது. பழைய பதிப்புகளில் "தீக்குறளைச் சென்றோதோம்" என்று தவறாகப் பதிப்பிக்கப்பட்டிருப்பதை இனி யெடுத்துக்காட்டக்கூடும். அது

விவேகிகளின் பணியன்று. இத்தவறான பாடத்தை நாம் 35 வருடங்களாகக் கண்டித்து வருகிறோம். குமுதத்தில் வெளிவந்த வியாஸங்களில் 'இங்குக் குறள் என்கிற சொல்வடிவம் கிடையாது. குறளையென்கிற ஐகாரவீற்றதான சொல்வடிவமேயுள்ளது' என்று காட்டப்பட்டிருந்தாலும் 'குறளைச் சென்றோதோம்' என்கிற தவறான சந்தி யுள்ள பாடமே ஆதரிக்கப்பட்டிருப்பதுபற்றி நாம் வருந்துகிறோம்.

21—11—63 தேதியுள்ள குமுதத்தில்—தெய்வ நூலாகவும் பொய்யாமொழி யாகவும் தமிழ் மறையாகவும் போற்றப்பட்ட திருக்குறளைத் திருப்பாவை பழிப்பதாகக் கூறப்பட்டது தமிழர்களின் மனத்தையும் புலவர்களின் மனத்தையும் புண்படுத்திய தாகப் பிரசுரம் செய்யப்பட்டிருப்பதையும், "புலவர் மாநாட்டிலே அவர்கள் ஒரு கண்டனத்தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்கள்" என்றெழுதப் பட்டிருப்பதையும் காண்கிறோம். ஆனால் பெரியவாள் கூறினது முதன்முதலாக எதில் வெளிவந்தது? அதற்குக் கண்டனத் தீர்மானம் எங்கு எப்போது நிறைவேற்றப்பட்டது? என்னு மிவை நமக்குச் சிறிதும் தெரிய வந்தில.

பெரியவாளை நேரில் கண்டு கேட்ட போது அவாள் சொன்னதாகப் பிரசுரம் செய்யப்பட்டிருப்பதை இனி ஆராய்வோம். பெரியவாள் மதுரையில் நடத்திய ஒரு பேச்சில் நூல்களிலேயே குறள் சிறந்த நூல் என்று பேசினதாகவும், அதனை வலியுறுத்தவே திருப்பாவைப் பாசுரத்தை விளக்கினதாகவும் கூறப்படுகிறது, திருக்குறளைப் பற்றின பேச்சில் திருப்பாவைப் பாசுரம் எந்த விதத்திலும் நினைக்கப் படுவதற்குப் பிரமேயமில்லையேயென்று ஒரே வார்த்தை சொல்லி மீண்டிருக்கவேண் டும் கேள்வி கேட்டவர். ஆண்டாள் திருப்பாவையில் திருக்குறளைத் தீக்குறளென்று இழித்துப் பேசியிருக்கின்றாளென்று பேசப்பட்டிருக்குமென்றே பலரும் நினைக்கிறார் கள். தீக்குறள்—இனிமையான குறள் என்று காட்டும் பொருள் பொருந்துவதற்கு நியாயமில்லையே. தீம் என்கிற சொல்லுக்கு இனிமை யென்னும் பொருளுண்டே யல்லது தீ என்னுஞ் சொல்லுக்கு அப்பொருள் எங்குங் கண்டதில்லை. தீங்குழல், தீந்தேன் தீங்கனி, தீங்கரும்பு என்னும் பிரயோகங்கள் திவ்வியப் பிரபந்தங்களிலு முண்டு. "நறுந்தண் தீம் தேனுண்டவண்டு, குறிஞ்சி பாடுங் கூடலூரே" என்றார் திரு மங்கையாழ்வார். "இனிமையான குறளைக்கூட ஓதமாட்டோம்" என்கிற பொருளைத் தரும் சொல்வடிவம் ஆண்டாள் திருவாக்கில் இல்லவேயில்லையே. இங்ஙனே கூறுவ தற்கு அங்குப்ரஸக்தியுமில்லையே. ப்ரஹ்மஸூத்ரத்தில் விதுராதிகரணத்தின் பெய ரைக் கேள்விப்பட்டுவிட்டு 'ஸ்ரீக்ருஷ்ண பக்தரான விதுரரைப்பற்றி வகுக்கப்பட்ட திவ்வதிகரணம்' என்று சொல்லிவிடலாமா? "குறள் பிரமசாரியாய் மாவலியை" என்ற பெரியாழ்வார் திருமொழியைக் கண்டு 'வாமனமூர்த்தி மஹாபலியிடம் திருக் குறள் ஓதிக்கொண்டு போனார் என்று சொல்லிவிடலாமா?

ஆண்டாள் காலத்தில் திருக்குறள் நூல் அவதரித்திருந்ததா? என்பது தனிப் பட்ட விசாரம். அது நிற்க, ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயஸ்தர்களில் ஒருவரும் ஒரு பேராசிரியரும் திருக்குறளில் குறை நினைத்தாரில்லை. அதற்குச் சிறந்த உரை வகுத்த பரிமேலழகரோ ஸ்ரீ வைஷ்ணவ ஸார்வபௌமர். பெரியவாச்சான் பிள்ளை முதலான பேராசிரியர்களும் தமது வியாக்கியானங்களில் திருக்குறளை யாதரித்துள் ளார்கள். ஓரிடம் காட்டி நிற்போம். திருவாய்மொழியில் (1—4—4.) *என்னீர்மை கண்டிரங்கி யென்னும் பாட்டின் வியாக்கியானத்தில்—ஒரு தமிழன் பட்டரிடம் வந்து பிரிவுப் பாசுரமான விதனில் 'என்னீர்மை கேட்டிரங்கி' என்னுதே 'என்னீர்மை கண்டிரங்கி' என்னத் தகுமோ? என்றுகேட்க, "புல்லிக் கிடந்தேன் புடை பெயர்ந் தேன் அவ்வளவில் அள்ளிக் கொள்வற்றே பசப்பு" என்கிற குறளையும் குறுந் தொகைச் செய்யுளொன்றையும் பட்டர் எடுத்துரைத்து 'இத்தமிழ் உனக்குப் போராதோ?' என்று சாதித்ததாகவுள்ளது. இங்ஙனம் ஓரிடமன்று. குறளாசிரியரோ விஷ்ணு பக்தரேயன்றி விஷ்ணுத்வேஷியல்லர். கீதையில் "ந புத்திபேதம் ஜநயேத்" என்கிறசுலோகத்தைப் பெரியவாள் அறியாதாருமல்லர். இவ்வளவோடு நிற்கின்றேன்.

# பாதுகை எப்படி வந்தது ?

(கீர்த்தி மூர்த்தி நாராயணையர் I. C. S.)

ஸ்ரீ ராமாயணம்-அயோத்யா 1.2-21ல் अधिरोहार्य ! पादाभ्यां पादुके हेमभूषिते । एते हि सर्वलोकस्य योगक्षेमं विधास्यतः ॥ என்று பரதப் பிரார்த்தனையும், 113-12ல் एते प्रयच्छ संहृष्टः पादुके हेमभूषिते । अयोध्यायां महाप्राज्ञ ! योगक्षेमकरे तव ॥ என்று வஸிஷ்ட வாக்கியமும் காணப்படுகின்றன. இவைகளிற் சொன்ன பாதுகையை ராமனே பூண்டு வந்தானு, அல்லது பரதன் கொண்டுவந்தானு? என்றொரு விசாரம் கோவிந்த ராஜீயத்தில் पादुका भरतेन आनीता என்று 113-11ல் வியாக்கியானிக்கப் பட்டிருக்கிறது. திலகவ்யாக்கியானத்தில் एते उटजसंनिहिते என்று மட்டும் எழுதப்பட்டிருக்கிறதே யல்லாமல் ராமன் பாதுகையை அயோத்தியிலிருந்து போட்டுக் கொண்டு வந்து அது ஆசிரமத்தில் இருந்து வந்ததா, அல்லது பரதன் நகரத்திலிருந்து கொண்டு வந்து அதை ஆசிரமத்தருகில் வைத்தானு வென்று விளக்கப்படவில்லை. [112-21]. रामायणटीकाவில் 112-21ன் கீழ் एते स्वसंनिधौ संस्थापिते पादुके पादाभ्यां त्वमधिरोह என்று காணப்படுகிறது. ஆசிரமத்தில் ஏற்கெனவே இருந்த பாதுகையை ராமன் முன்னிலை யில் வைத்து अधिरोह என பரதன் பிரார்த்தித்தானு, அல்லது தான் நகரத்திலிருந்து கொண்டு வந்த பாதுகையை ராமன் முன்னிலையில் வைத்து வேண்டினனு என்று விளக்கப்படவில்லை. "स०" (सर्वार्थसिद्धि-இது கும்பகோணம் Editionல் உள்ளது; Gujarati Editionல் இல்லை] வியாக்கியானம் 112. 21ன் கீழ் एते च पादुके भरतेन सहानीते इति बोध्यम् । अन्यथा रामस्य वस्त्राणि गृहीत्वाऽजिनानि दत्तवत्याः कैकेय्या रामाय हेमपादुका-दानस्य अनुचितत्वात् ॥ என விருக்கிறது.

அநௌசித்யம் என்பது இந்த வியாக்கியாதா நிரூபிக்கும் காரணத்துக்கே பொருந்தும்! கைகேயி சொன்னதெல்லாம் अभिषेकमिमं त्यक्त्वा जटाजिनधरो वस (2-18-37) என்று மட்டுமே. चीराजिनजटाधारी रामो भवतु तापसः। (2-11-27) என்று சக்ரவர்த்தி யினிடம் வரம் வேண்டினவள் तापसः என்ற வார்த்தையைக் கூட ராமனிடம் சொல்ல வில்லை. முனிவஸ்திரங்களை ஸபையில் தானே எடுத்து ராமனுக்குக் கொடுத்து உடுத் துக் கொள்ளச் சொன்னுள். (2. 37. 6, 7). உடன்கையிலே சடை போட்டுக்கொள் ளும்படி வற்புறுத்தினுளில்லை. 'உன்காதில் அணிந்திருக்கும் குண்டலங்களைக் கழற்று, உன் விரலில் அணிந்திருக்கும் அங்குளீயகத்தை அகற்று,' என்று துச்சமான வார்த்தை களை மொழிந்தாளில்லை. ஸ்ரீராமாயணத்தில் இந்த கட்டத்தில் கைகேயியை இகழாதா ரெவருமில்லை. ஆனுல் வியாக்கியாதாக்கள் கம்பீரமான போக்கை விட்டு கவிவசனத் துக்கதிகமாக இகழ்ந்து எழுதுவதானது चिन्त्यम्॥ न नूनं मयि कैकेयि ! किंचिदाशंससे गुणम् । [2-19-24]; विद्धि मामृषिभिस्तुल्यं केवलं धर्ममास्थितम् । [2-19-20] என்று கைகேயிக்குச் சொன்ன பிரபுவுக்குக் காட்டுக்குப் போகும் தான் என்ன கோலம் பூண்டு போகவேணுமெனத் தெரியாததா? தனக்கு நியமிக்கப்பட்ட வனவாஸத்தை மஹோதய ப்ரஸூதியெனக் கருதின (2. 22. 29) ராமன் சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினுலும் அதைக் காட்டினதற்கு அறிகுறியாக அந்தப் புரத்தை விட்டு வெளி வந்த மாத்திரத்தில் உத்தரீயங்களைக் களைந்து த்வாரபாலகர்களுக்களித்தான்.

सविहायोत्तरीयाणि महार्हाणि महायशाः । विसृज्य मनसा राज्यं जनन्यै मां समादिशत् ॥ (5-33-27) என்று ஸீதை ஹநுமானுக்குக் கொடுத்த அத்தாட்சி. अयं स पुरुषव्याघ्रो द्वारि तिष्ठति ते सुतः । ब्राह्मणेभ्यो धनं दत्त्वा सर्वं चैवोपजीविनाम् ॥ (2-34-6) என ஸுமந்திரர்

விஜ்ஞாபனம் பண்ணினுர். पदाति त्यक्तसर्वस्वं पितुर्वचनकारिणम् । (6-127-6) என்று வனம் புகுந்த மேரையை வனவாஸ முடிவில் நினைந்து பரத்வாஜர் உருகிப் போனுர்.

ஸமஸ்த ஐச்வர்யத்தையும் துறந்து வனமேகினுன் ராமனென்பது பதப்பொருளாக ஸித்தம். பொன் கட்டின பாதுகையோடு நடந்தானென நாம் நம்பக் காரணமேதுமில்லை. அதைப் பேணிக் கொள்ளாதது அவனுடைய த்ருட'வ்ரதத்தினுலேயல்லாது கைகேயியின் யாதொரு தடங்கலாலுமல்லவென்பது திண்ணம்.

வனத்துக்கு ஜடாவல்கலதாரியாகச் சென்ற ராமன் பூண்டது இரண்டே; இன்றியமையாத கணையாழி ஒன்று இடக்கையில், திருத்தாயார் மந்திரமோதிக் கட்டின இரட்சையொன்று வலக்கையில்—ओषधीं चापि सिद्धार्थां विशल्यकरणीं शुभाम् । चकार रक्षां कौसल्या मन्त्रैरभिजजाप च ॥ [2-25-38].

ஆனது பற்றி, பொன்கட்டின பாதுகை பரதனுல் கொண்டுவரப்பட்டதென கோவிந்தராஜர் கொண்ட தீர்மானத்தை நாம் அங்கீகரிக்கத் தடையில்லை. ஆனுல், என்ன உத்தேசங்கொண்டு பரதன் பாதுகையைச் சித்திர கூடத்துக்குக் கொண்டு வந்தானென்ற அம்சத்தில் அவருடைய ஸித்தாந்தம் யோசிக்கத்தக்கது. அயோத்யா 113. 11. (12)ன் கீழ் हेमभूषिते इत्यनेन रामाय प्रीत्या समर्पयितुमभिनवतया निर्माय नगराद्भरतेनानीते इति गम्यते । என்று காரணம் காட்டியிருக்கிருர். தமையனிடம் தனக்குள்ள பக்தியினுலும் பிரீதியினுலும் அவனுக்கு நன்கொடையாக சமர்ப்பிக்கத் தங்கக்குமிழி கட்டின பாதுகையைப் புதிதாக இயற்றி நகரத்தினின்று பரதன் கொண்டுவந்தானென்ருல், அதனுல் ராமனுக்கு எவ்வாறு உபகாரம் ஏற்படக் கூடியது? மிதியடியின்றிச் சித்திர கூடத்துக்கு நடந்த ராமன் இனியாவது சிரமப்படாவண்ணம் பாதுகையணிந்து சஞ்சரித்து மிகுதி வனவாஸத்தைக் கழிக்கட்டுமென பரதன் எண்ணமென்றல்லவோ தேறுகிறது? பாதுகை தன் வனவாஸத்துக்கு உபகாரமாயிருக்குமென்று பரதன் நன்கொடையை ராமன் அங்கீகரிப்பனென்றே கொள்ளுவோம். தமையனது வனவாசத்தை நிலைப்படுத்தவா சதுரங்க சேனையோடும் நாடு நகரத்தோடும் சித்திரகூடத்துக்கு வந்தனன் பரதன்? இதைச் சற்று ஆலோசிக்குங்கால் கோவிந்தராஜீயத்திலுள்ள ஊஹம் ஸமீசீனமல்லாததென்று விளங்கும்.

வனவாஸத்தை இம்மட்டோடு நிறுத்தச்செய்து ராமனைத் திரும்ப அயோத்திக்கு அழைத்துப் போவதுமல்லாமல், சித்திரகூடத்திலேயே அவனுக்கு முடிசூட்டி நகரத்துக்கு இட்டுப் போவதென்ற ஆசம்ஸையோடல்லவா பரதன் வந்தது? இந்த மனவுறுதியுடன் அயோத்தியை விட்டுப் புறப்பட்டான். சித்திர கூடத்தை யடைந்து आभिषेचनिकभाण्ड மணைத்தையும் ராமசமுகத்தில் வைத்து इहैव त्वाभिषिञ्चन्तु सर्वाः प्रकृतयः सह । ऋत्विजः सवसिष्ठाश्च मन्त्रवन्मन्त्रकोविदाः ॥ अभिषिक्तस्त्वमस्माभिरयोध्यां पालने व्रज । विजित्य तरसा लोकान्मरुद्भिरिव वासवः ॥ (2-106.26, 27) என்று ராமனேடு மன்ருடினுன்.

ஹேமபூஷிதமான பாதுகை அபிஷேகத்துக்குரிய வஸ்துவேயன்றி வேறல்ல. அது நூதனமாகச் செய்யப்பட்டதென்று கோவிந்தராஜர் மதமாஞலும், तदपेक्षया, புஷ்யயோகத்தில் திருவபிஷேகத்திற்காக ஸித்தப்படுத்தப்பட்ட எந்த आभिषेचनिकभाण्ड த்தை सापेक्षो दृष्टिं तत्राविचालयन् ராமன் வலம் வந்ததாகச் சொல்லப்பட்டதோ (2.19.31) எந்த மங்கல வஸ்து ஸம்பாரங்கள் காட்டுக்கு ஏற்றிப் போகப்பட்டு ராமசன்னிதானத்தில் வைக்கப்பட்டிருந்தனவோ ; அவைகளில் ஒன்ருன பாதுகையை சுட்டிக் காட்டி एते पादुके हेमभूषिते என்று வஸிஷ்டரும் பரதனும் சொன்னுர்களென்று கொள்ளுவதே ஸமஞ்ஜஸமெனத்தேறும். ... ... ... ...

Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) V. GOPALSWAMI,
17, பண்டி வெங்கடேச நாய்க்கன் தெரு, திருவல்லிக்கேணி.

(4) G. ரங்கைய நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்திரிபேட்டை, மதராஸ்—2

(இவர் சென்னையில் பிரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.



125. sri vanjipuram raghavacharya,
Melkote (Mysore state).

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kancheepuram.